வெங்களிற் றெருத்த மீது விண்முழு தாளி யொத்தும்
புங்கவண் சிவிகை யுள்ளாற் புலோமசை போன்றும் பல்லோர்
திங்கள்வெண் கவிகை நீழற் றிப்பியப் பவனி போது
மங்கல வியமுழக்கே மலிந்துள வுள்ள ரேறும். (அ௨)

அறநெறித் தொன்று தொட்டீண் டமரனு லோம ரோடு
பிறநகர் நின்றும் போந்த பிரதிலோ மாதி யேனோ
ருறவுயர் நான்கு சாதி யொழுக்கிழுக் காது செல்லத்
திறன்மலி யேது வாகிச் செருக்கிவா ழிருக்கை பல்ல. (அ௩)

மன்னர்நூன்முறைச்செங் கோலு மறையவர்வரைப்பைங் கோலுந்
தென்னிளங் கோக்கள் கோடாச் சீர்த்துலைக் கோலுங் கொள்ள
நன்னரேர்ப் பகடு கைக்கு நலத்தகோல் கரத்துக் கொள்ளும்
பின்னவர் பீட்டின் வைகப் பெறுவன மறுக நந்தம். (அ௪)

உழுதுண்டு வாழ்கின் றாரே வாழ்நர்மற் றொழிந்தா ரெல்லாந்
தொழுதுண்டு பின்செல் வாரென் றன்றவர் சொற்ற வாற்றாற்
பழுதென்றுங் கெழுமாச் செல்வப் பகீரதி குலத்தார் மேன்மை
முழுதுங்கட் டுரைப்பான் வல்லான் முதுக்குறை யனந்தன்றானும்.

பெருங்கலம் பாண்டிற் பாண்டில் பிறவுய்த்துச் சேமைத் தேய்த்த
வரும்பொருள் வருவித் தியாரு மவற்றினை விலைந யப்போ
டிருந்துழி யிருந்தே கொண்மா ரெண்ணமயி னுகர வன்பிற்
றருந்திரு வாளர் மன்னுந் தடந்தெரு மிடைந்திலங்கும். (அ௬)

காரியல் வலிய பாசக் கட்டினு லரநா மத்தெம்
மாரியன் மேலுங் கீழு மாவியை யியக்கு மாபோற்
சீரிய படங் கார்ப்பாசச் சிமிழ்ப்பினல் வானுய்த் திம்பர்ச்
சேரிய வீர்த்து நாய்கச் சிறார்வினை யாடு கிற்ப. (அஎ)

தணியவீ மாலை நாலத் தமனியங் கொடுகு யிற்றி
வணிகர்பொன் மேனி லைப்பான் மகாரினம் விடுத்த வானி
மணிமயத் திலங்கை யெய்த மகேந்திர வரையிற் றூய
வணிகிளர் நெடிய கூலத் தஞ்சனை சிங்க மன்ன. (அஅ)

தூயதண் பளிங்க டுப்பிற் றுகிர்க்கொடி விறகு சேர்த்திப்
பாயபொற் றசும்பு மேலாற் பதீஇப்பனி நீரு லைப்பெய்
தாயமுத் தரிசி போகட் டவிருஞ்செம் மணித்தீ யூதி
வாயமை நாய்கப் பேதை மார்சிறு சோறட் டார்வார். (அகூ)

கற்றவெல் கேள்வி யொட்பங் கரிசில்பல் செல்வம் வண்மை
முற்றிசை சைவச் சார்பு முதலிய வுயர்ச்சி யெல்லாந்
தெற்றென வுடைமை பற்றிச் சிரேட்டிக ளென்னு நாமம்
பெற்றுளார் பெருமை யெம்மாற் பேசலாம் படித்தொன் றன்றே.

பரந்தபார் நூற்றுப் பத்துப் பைத்தலைப் பரிப்போ னுணைத்
திரண்டுநீண் டறப்ப ணைத்துத் திண்மையுங் கவினும் வாய்ந்த
விரண்டு தோள்வலியான் ஞால மெனைத்தையு மெளிது தாங்கித்
துரந்தர ரெனும்பேர் வாய்ந்தோர் துறுமிய வீதி பல்ல. (கூக)

முனிவொடு போர்மேற் கொண்டு முரணுபு தமைப்ப கைத்த
மனிதரைத் தேவ ராக்கி வான்வயின் வரம்பில் போக
மினிமையிற் றுய்ப்ப வுய்ப்ப விந்நகர் வேந்த ரென்று
லனிசமு மடுத்தார்க் கன்னு ராற்றுசீ ரறைதற் பாற்றே. (கூஉ)

உளமுயன் றரிதிற் றுன்பெற் றுளதி லோத்தமைப் பேர்நங்கை
வளமைகண் ணுற்று வெஃகி மான்றதன் புன்மை யுன்னி
முள்ரிவாழ் புத்தே ணுனு முகத்தனுய்ச் சமழ்ப்புக் கூரப்
பளகிலா வொழுக்கங் குன்றுப் பார்ப்பனச் சேரி பல்கும். (கூந)

ஆகவ னீய மாதி யக்கினி நனிவ ளர்ப்பார்
தாகநீ டதிதி யாயோர் தம்வயிற் றழல விப்பா
ருகநூ லாறு தேர்ந்தெவ் வுயிர்க்குந் தண் ணளிநன் கிவா
ரேகநா யகன்பா லென்று மின்னருளேற்பா ரன்னோர். (கூச)

எனைவர்க்குந் தம்மை யோம்ப வியற்கையிற் கிடந்த தொன்று
லனைவர்க்கு முய்தி செய்தி யரியவற் றரிதென் றோர்ந்து
நனைவர்க்கத் தீச பூசை நம்பொருட் டியற்றி வெய்ய
வினைவர்க்க நீத்த வாதி சைவர்வாழ் வீதி பல்ல. (கூரு)

சேதன பதார்த்த முற்றுஞ் சிவபிராற் கடிமை யென்றும்
போதமில் சடமெ லாமப் புண்ணிய னுடைமை யென்றுந்
தீதற வுணர்ந்து தேறித் திருவருள் வழிச்சென் றென்றி
நாதமே லின்பந் துய்க்கு ஞானியர் மடமு முண்டால். (கூசு)

பைவகைப் பாப்புக் காப்புப் பரம்பரன் றளிமஞ் சூழ்ந்த
மைவகை தவழும் பஞ்சா வரணமா மதில கம்புக்
குய்வகை வழிபட் டேத்தி யுள்ளநெக் குருகு வாரை
ஐவகைப் பாசஞ் சாரா தமைத்துள தடையே யன்ன. (கூஎ)

இருவிசும் பொருவி யோங்கி யெண்மைதீ ரிஞ்சி யும்பர்த்
தருமவெள் விடையு ருக்க டயங்குபு புலப்ப டுத்தும்
பொருவிகந் துயர்ந்த சைவ புண்ணியப் பகுப்பி யார்க்கு
மருமைய கிட்டக் கிட்டி னணிந்துவீட் டுலக மென்றே. (கூஅ)

மேவிய விதிவ ழாமே விருப்பினர் தன்பாற் றேய்ந்தோர்
தீவினை யுடைந்திவ் வாறு சிதறுமென் றெவருந் தெள்ள
வோவியப் பத்திப் பித்தி யுழிமணி யணித்த ரங்கம்
வாவிமன் பொருது சிந்து வாசுகி வாவி மன்னும். (கூகூ)

தொடங்குறு ஞான்று சாலத் துன்பமாய் முடிவி லின்பாய்
மடந்தபப் புரியுங் கல்வி மானவாய்ப் பெய்யுங் காலைத்
திடம்படக் கைத்துப் பின்னர்த் தித்தித்துப் பன்னோ யோடு
விடந்தெறும் பாச டைத்து வேம்பொன்று நிழற்று மாங்கண். ()

பொன்னணி மாட கத்திற் பொலிதிவ வியாழோ டாங்குக்
கன்னனி யுருக்குங் கீதங் காயக ரிசைப்பக் கேட்டுக்
கின்னர கான மென்ன வியந்தனர் கிளந்த நீராற்
கின்னர நாமம் பெற்றுக் கிளர்ந்தன ரொருசார் வானோர். (கoக)

மாநகை பெருக வங்கண் வஞ்சியர் புரிந டத்தைத்
தூநகை யரம்பை மாருட் சுரிகுழ லொருத்தி நோக்கிக்
கோநகை மணிப்பூ ணின்னோர் குழாத்தெதிர் பிறர்ந டிப்பின்
மேநகை யென்ற வாற்றன் மேநகைப் பெயர ளானாள். (கoஉ)

சிவாகமத் தொகுதி யார்ப்புந் திப்பிய மறைமு ழக்குந்
தவாதவீ ரைம்பு ராணத் தழக்கமு முலக முய்வா
னவாய்நம குரவர் சொற்ற வருட்டிரு முறையி சைப்பு
முவாமதி யுதயங் கண்ட வுவரிநான் கெனவூங் கோங்கும். (கoங)

வாதியாச் செந்தீ வண்ண வன்மீக வரதன் வாழ்க்கைச்
சாதிமா ணிக்கஞ் செற்றித் தயங்குபொன் விமானக் கோயில்
பாதிமா துடனின் றூடல் பயிலுமப் பரமன் றன்னைச்
சோதியுட் சோதி யென்னுந் தொன்மறைப் பொருள்வி ளக்கும்.

வயங்கொளி பரப்பு மின்ன மந்திரத் தியாரு நான்மைப்
பயன்பெற வருளின் வைகும் பழம்புற்று நாதன் பல்சீர்
முயங்கிய வமிர்த மன்ன முதிர்நறுஞ் சுவைய காதை
யியம்புமா தொடக்கஞ் செய்தே னினிப்பொறித் தொடக்கஞ்
செய்தேன். (கoடு)

ஆகத்திருவிருத்தம். உகடு.

நகரப்படலம் முற்றிற்று.

---

# நைமிசப்படலம்.

மேன்முக விண்ணவர் வெஃகிய பார்க்குத்
தான்முக மாகி நிலாவுபு தங்கு
நூன்முக மாதவர் நோன்பினி தாற்ற
நான்முக னல்கிய நைமிச விபினம். (க)

மைய குயிற்குரன் மல்க மரன்க
ளையரை வெய்யி லடாது நிழற்றிச்
செய்ய நறுந்துணர் தீங்கனி வீசா
நைய லொழிப்பது நைமிச வடவி. (உ)

தொடையர மங்கையர் துன்புறு மாறு
மிடைவொடு விபுதர் விலங்கலர் வைக
விடையற வின்றிந லிட்டியெஞ் ஞான்று
நடைபெறு கிற்பது நைமிச முளரி. (௩)

அந்தணர் தம்மை யருங்கதி யுய்ப்பான்
வந்துள செம்மணி மானவி னம்போற்
பந்தியின் வெட்சி பரம்ப மலர்ந்து
நந்து வளத்தது நைமிச ககனம். (௪)

கொன்றை யலர்க்குவை கொட்டுத லமர
ரென்று மெமக்கவி யீவதி தென்னப்
பொன்றலில் பொன்மழை பொழிவது போலு
நன்றி கெழீஇயது நைமிச கானம். (௫)

வெம்மை யகன்ற தளங்கொடு வில்வ
மிம்மையு மறுமையும் வீடுமெனத் தான்
மும்மை யளிப்பதொர் முறைமை யுணர்த்தா
நம்மைய தீர்ப்பது நைமிச தாவம். (௬)

வீற்று வியன்சினை தூங்கு விளங்காய்
நோற்றுறை வார்தமை நோய்செய லாற்றுா
தோற்றமி னார்திரள் கொங்கை துணித்து
நாற்றிய வொப்பது நைமிச முதையல். (௭)

வேறு.

மாறு பாடின்றி வைகுசிங் கத்தையு
மேறெ ணுதன மிட்டிருந் தேமுழு
நீறு பூசி நியமஞ்செய் வோரையும்
வேறு காண்டல் விபுதர்க்கு மொண்ணுமே. (அ)

நீங்க ணின்மலன் சாரூப் பியநிலை
யோங்கு ஞான்றெம் முரிகொண்மி னென்பபோல்
வேங்கை யீட்டம் விழைந்து படிமத்தர்
பாங்கர் மொய்த்துப் பரம்பி முழங்குவ. (௯)

அவியு மைந்திற் றவம்புரி வாரயற்
செவியெ றிந்து செழுங்கரி நிற்பன
நவில வர்க்குமெய் வேர்வை நதுக்குவான்
சிவிறி கொண்டு விதிர்ப்ப சிவணவே. (௧௦)

அருந்த போதனர்ச் சூழ்ந்த வழலெதிர்
குரும்பி வாய்ப்பக் குடாவடி புற்றின்கீழ்
விரும்பிக் கிடல் விகிர்தன் கழல்பண்டு
திரும்பன் றிச்செயல் தோன்றுவிக் கின்றதால். (௧௧)

வடிவ முற்றும் வடிக்கணே யேறுண்டுங்
கடிய போரிழைப் பாரிற் கதிர்வன
வொடிவு ருதெழு மூடலி னுலடர்
கொடிய வாற்றன் முளவின் குலமரோ. (௧௨)

முல்லைத் தாபத பன்னியர் முன்னர்ப்பைம்
புல்லைக் கவ்விக் குதட்டும் புல்வாயெமக்
கொல்லைத் தம்மி னுமாதுமென் னேக்கெனுப்
பல்லைக் காட்டி யிரந்தன்ன பான்மைய. (௧௩)

தேன லின்கனி செந்தளிர் காய்கிழங்
கான வுண்டி யனைத்து முறுவர்க்கு
வான ரங்கொடு வந்து திருமுனுய்த்
தேன வுங்குறிப் பாலியற் றுநிற்கும். (௧௪)

இன்ன பல்ல வளஞ்செறிந் தீறிலா
நன்னர் மல்கிய நைமிசக் காட்டிடைத்
தன்னை மானுஞ் சவுநக னுதியோர்
மன்னி யுள்ளார் வரம்பி லிருடியர். (௧௫)

அனையர் யாரு மவனுயிர் வர்க்கத்தை
வினையி னீக்குபு வீட்டி னிறுவுவான்
றுனைய ருட்சிவ சோதியை முன்னினர்
நினைவ ரும்பெரு மேத நிகழ்த்துழி. (௧௬)

ஏந்தி வேணி மவுலியை நீறெனுஞ்
சாந்த ணிந்தரன் கண்மணித் தார்புனைஇப்
பூந்தண் வற்கலை பொறப்பத் தவமெனும்
வேந்து மேதினி மீதினிற் சார்ந்தென. (௧௭)

ஆண்ட டைந்தன னைந்தொழி லாநந்த
தாண்ட வம்புரி சங்கரன் றுளலால்
வேண்ட மற்றறி யாத வியாதன்பால்
நீண்ட கேள்வியி னுனிறை சூதனே. (௧௮)

சிவாக மோப நிடத்தலைச் செம்பொரு
டவாது ணர்ந்தவச் சைவ முனிவனை
யவாவின் மாதவர் சேட்கண் டடுத்தெதிர்
சுவாக தங்கில வென்னத் தொழுதுபின். (௧௯)

குன்று றுக்குணக் குன்றின தும்பரின்
மன்ற நின்ற வரத புராணிக
வின்று சாலப் பலித்த வெமதுநோன்
பென்று வாழ்த்திக் கொடுபுக் கிருக்கையுள். (௨௦)

இருத்தி மிக்க வெழிற்றவி சின்மிசை
யருக்கி யாதி முகம னளித்தவன்
மருப்பொ லிந்த மலர்முக நோக்குபு
விருப்பி னேடு விளம்புதன் மேயினர். (௨௧)

கண்ணி யன்ற நுதற்கறைக் கண்டத்துப்
புண்ணி யன்றன் புராணநீ பன்முறை
நண்ணி யன்றெமக் கன்பி னவின்றும்யாம்
திண்ணி யம்புல னுற்றெளிந் தேமிலை. (௨௨)

இம்மை யந்தில் மறுமைநல் வீடெனு
மும்மை யின்பு மெளிதருண் மூர்த்தியுஞ்
செம்மை நீடிய தீர்த்தமுஞ் சேர்த்ததா
யெம்மைத் தேற்றுதி யீண்டிசைத் தோர்தலம். (௨௩)

எனவி ரந்த விருடியர்க் கையர்காள்
பனக மேந்து படிமுழு துய்யநீர்
வினவி யுள்ளது நன்று விழுமிதென்
றனக நெஞ்சிற் சிறிதுபோழ் தாய்ந்தரோ. (உச)

பொருவில் சைவ புராணம் புகல்வது
கருநெ டுந்தடங் கண்ணுமை யாள்பிரி
வருமை நாதனை யர்ச்சித்துப் பெற்றது
திருவ மான்முத லோர்க்கருள் செய்தது. (உரு)

முச்சி றப்பு முதிர்ந்தது கற்றவர்
நச்சு பாண்டிநன் னாட்டகத் தண்மிய
தெச்ச கத்துமொப் பில்லதொன் றுண்டதன்
மெச்சு நாந்திரு வெற்றியூ ரென்பவே. (உசு)

என்ன வன்னத னேற்றந் தொகையினுற்
சொன்ன தொன்னெறித் தோன்றலே நோன்றவர்
மன்ன வின்னும் வகுத்துப் புலப்படப்
பன்னல் வேண்டுது மென்று பராவலும். (உஎ)

ஆயு நுண்மை யறிவின னுவிரண்
டாயி ரத்த னனந்த னனந்தனீத்
தாயுள் காறறைந் தானுமச் சீரறு
தாயி னும்பகர் கேன்ற வளவெனு. (உஅ)

காதற் கோர்கரை யின்றிக் கவுரிகோன்
பாதப் போது பதித்து மதித்திசைச்
சூதப் பேர்புனை தூயவ னைமிச
மேதக் கார்க்கு விரித்தனன் கூறுமால். (உகூ)

ஆகத்திருவிருத்தம். உசச.

நைமிசப்படலம் முற்றிற்று.

---

# திருக்கைலாயப் படலம்.

மணங்கு லாவிய தென்றலம் பொதியமும் வடபா
லிணங்கு பொன்னெடு மேருவு மால்வரை யிறையும்
வணங்கொண் மந்தர சைலமு மெனவியன் மலையின்
கணஞ்சு லாய்ப்பணிந் திடநடு நிமிர்வது கைலை. (க)

பனற்க ரும்பெருந் தகைமைசால் வலிமலி பறம்பி
னினத்தை வைரவாள் கொடுகொடு நீள்சிறை யீர்ந்தோற்
சினத்து வென்றபோர் மீளியை மகப்பெறு தீரன்
கனத்த தோளிரு பதுமிற வமிழ்த்தது கைலை. (உ)

அரங்க வோர்கிரி குடைகொண்டோர் குன்றுபா லாழி
யிரங்கு மாறுநட் டுலைப்பில பருப்பத மெடுத்துத்
தரங்க மிக்கெறி யுவரியின் மிதப்பித்த தக்கோரன்
கரங்கு வித்தனன் வழிபடப் படுவது கைலை. (ந)

கொடியி டைப்பரை தந்தையை நோக்கிய குறிக்கி
னெடிது சேணிடை நிலையுத றகாதென நினையாப்
பொடிபு னைந்தவ னவற்கணித் திரீஇயது போலக்
கடியு லாம்பனி மால்வரைப் பானகுங் கைலை. (ச)

முனமொர் காலிதன் முடியடி யுணர்கென மொழிந்து
வனச மீக்கிளர் தாதையுந் தாதையும் வயிரா
வனமு மேனமு மாகிவிண் மண்புகுந் தறியாக்
கனலி யோங்கலைத் தாங்குறுந் திறலது கைலை. (ரு)

புவியின் மாமன்வில் வடிவிவை பொருப்பெனப் படைத்தா
னவிலி னுயக னகநகை யாளனென் றவனை
யவிரு நல்லறஞ் சிலம்புரு வாய்ப் பரித்தாங்குக்
கவினு கின்றது வெள்ளிய வொள்ளிய கைலை. (சு)

இடப மாய்ச்சுமந் திறையைமா லெய்திய செல்வத்
திடனின் மிக்கது பெறுகெனச் சலிப்பறத் தினமும்
விடலி லாற்றலாற் கலைமகள் வெற்புரு மேயக்
கடவு ளைப்பொறுத் தோங்கியாங் கிலங்குமொண் கைலை. (எ)

வெந்த நீறுவா னதிமதி வேய்மழ விடையோ
னுந்த வெண்பொருள் விருப்பினன் போலுமென் றுலக
முந்த ளந்தவன் றவளமெய் கெழுமியம் முதல்வற்
கந்த ரித்துமேக் கெழுந்தென நிவந்தது கைலை. (அ)

தாணு நம்பிரான் சங்கரன் பசுபதி தானுட்
பூணு மாரரு ளேக்கின்றிப் புனிதமாய்ப் போற்றிப்
பேண நீடிய தகைத்தென வெளிப்படப் பெரும்பார்
காண நாட்டிய குறிபொரா மிளிர்வது கைலை. (கூ)

கோட்ட மோவுசத் துவகுணங் குழீஇத்திரண் டாவி
யாட்டு மெந்தையை மேற்படுத் தணையன்கீ ழடங்கி
வாட்ட நீவுமப் பரன்குணு தீதனும் வாய்மை
காட்டி ஞலெனத் திகழ்வது வாலிய கைலை. (௧0)

மதித்த மூவகை முத்தியர் தானமாய் மருட்சி
யுதிர்த்த தொண்டருக் குயர்பர போகமீத் துவகை
முதிர்த்த லால்வரு சீர்த்திதன் மேனியை மொய்த்துக்
கதித்த நீர்மையிற் பானிறங் கஞன்றது கைலை. (௧௧)

உஞ்சு போக்கடி யவர்க்குத வுடையவ ளேடு
கொஞ்சி யாட்டயர்க் தியங்குழிப் பச்சிளங் குமரி
பஞ்சின் மெல்லடி பரிந்திடா வண்ணம் வெண்பட்டுக்
கஞ்சு கந்தரித் தெனவிளர்த் தவிர்வது கைலை. (௧௨)

சிறந்த வெற்பர சின்றெனத் தேவியை யீனுந்
திறங்கு றீஇமுழு நீறணிந் திருங்கணீர் சிந்தி
யுறந்த நோன்புழந் தாங்குவெள் ளொளிமிடைந் தருவி
கறங்க வீழ்த்துபு பெயர்வின்றி நிற்பது கைலை. (௧௩)

அருகு சாரர மகளிரை வாணிநே ராக்கித்
திருவ மார்சுர குலம்பல ராமனிற் செய்து
பொருவில் பானுமுற் கோளெலாம் புகரெனப் புரியுங்
கருதொ ணுதவிம் மிதத்தது வாலொளிக் கைலை. (௧௪)

இழிவு தீர்பொரு ளெவற்றினுந் தவப்பெரி தேனும்
விழிகண் மூன்றுடைக் கருணையங் கடலொடு மேவி
யழிபு நெக்குரு கணுக்களி னுழைமனத் தடங்குங்
கழிசி றப்பியல் சித்தியும் படைத்தது கைலை. (௧௫)

துலமி கந்தவைங் கையுவாத் துணைப்பதச் சுவடு
மிலகு மூவிரு முகத்திள வேற்றடிச் சுவடு
நலந டந்தொழு புலிப்பறழ் நறியகாற் சுவடுங்
கலவி யெங்கணுங் காண்டகக் கதிர்வது கைலை. (௧௬)

ஒளிறு தாதைமே லொத்ததன் மகத்தவழ் வுறழ
வெளிறு கேழ்த்துநீள் பற்பல்கோட் டதுமத வெள்ளப்
பிளிறு பேரரு வித்தயி ராவணப் பெயர்த்தோர்
களிறு மீவிளை யாடிய கவின்றது கைலை. (௧௭)

நேசங் கூர்ந்தருட் சைவமெய்ந் நெறிபுகு பசுக்க
ளீசன் பல்கணத் தெண்ணப்பட் டறவிறு மாந்து
பேசுந் தேசொடு பெருமித நடைபெறல் பிறக்கிக்
காசின் றேறென்று மதர்த்துலாய்ப் பயில்வது கைலை. (௧௮)

தாணு வைத்தழீஇ யுவர்க்கடல் பவக்கடல் தாண்டே
வாணவந் தவிர் பரமுத்தி யடைந்த நாவரசு
மேனுடைத் திருமேனி புண்படப் புரண் டியங்காக்
காண வெஃகிய மான்மியஞ் சான்றது கைலை. (௧௯)

குனிந்த திங்களங் கண்ணியான் றுயிலாக் குறையை
யனுங்க நீக்குவோ னென்ன முன்னம்மையே யென்னப்
புனைந் தழைத்திடப் புண்ணியம் புரிந்துள புனிதை
கனிந் தணித்தலை யாற்படர் தலையது கைலை. (௨௦)

மண்ண கத்ததென் றளப்பரு மானிடர் வழுத்த
வெண்ண கற்றிய நாகர்பா தலத்ததென் றிசைப்ப
விண்ண கப்பொலி விபுதர்மீ மிசைத்தென மிக்க
கண்ணகற்சியோ டாழ்ந் தெழுந் தொளிர்வது கைலை. (௨௧)

ஆசி னித்திசைத் துருவசக் கரப்பிணி யறுமா
வீசி யேகுவான் கோளொடு நாளெலாம் விழையூஉ
வேசி லாத்தவம் வெள்ளிடைப் புரிதிற னேய்ப்பக்
காசி னங்கிடந் திடந்தொறுந் திகழ்வது கைலை. (௨௨)

குளிற மாமுழ வின்னியங் கலிப்புறக் குழூமி
யளி நறுங்குழ லரம்பைய ராடலே யன்றி
நளி முகிற்குலங் குமுற வாலருவிக ணரலக்
களிகொண் மஞ்ஞைநின் றாடலும் பொலிவது கைலை. (௨௩)

விலகு சேய்மையிற் கேட்குநர் மிடற்றிசை யெனவுஞ்
சிலவர் வீணையி னரப்பிசை யென்னவுஞ் செப்பக்
குலவு விஞ்சையர் மாதர்யாழ்க் குரலுந்தங் குரலுங்
கலவு மாசெயுங் கானத்தின் மலிந்தது கைலை. (௨௪)

புறத்து றுப்பெழில் பயப்படா தகத்தரன் பொற்றாட்
கறத்த ழைத்தவன் பேசிறப் பருளுவ தெனுநூற்
றிறத்தை யென்னருந் தெளியுமா பத்திமை சிவணிக்
கறக்கி யின்னியங் குறள்குலாய்க் குனிப்பது கைலை. (௨௫)

இன்ன வெள்ளியம் பருப்பதத் துச்சியி னிடத்து
நன்னர் விச்சுவ கன்மனே நல்குநான் முகனே
முன்ன ளித்தமா யனைத்தரு முழுமுத றனக்கு
மன்ன வாக்கிய சீருடைச் சிவபுரம் வயங்கும். (உ௬)

அனைய மாநகர் நனந்தலை நனந்தலை யமர்ந்த
வனைக ழற்கழல் வருங்கழல் வரதனை நிழற்றி
வினைது மிப்பவிண் மீனெலா மிடைந்தென வில்வாள்
புனைம ணிக்குலம் பொதுளிய திருத்தளி பொலியும். (உ௭)

நவின்ற நீடறக் கேதன நிகேதன நாப்பட்
கவின்ற சுத்தமா யாமயக் கதிர்செய்மண் டபத்து
ளவிர்ந்த தத்துவங் கடந்தபே ரருளுரு வாகித்
தவிர்ந்து சேயொளி மடங்கலா மடங்கலா தனத்தே. (உ௮)

தண்ண ருக்கலை முழுமதி சிறுவிதி சாப
முண்ணி லாயவென் றன்பொடு மொருங்குதிர்த் தளித்த
வண்ண லார்க்கியா னிழல்செய் கெனநிவந் தாங்கு
வெண்ணி லாவுமிழ் நித்திலக் கவிகைமேல் விளங்க. (உ௯)

இவறி மாற்றவ ளெம்பிரா னெருபுறத் தியைந்தா
ளவளை நாணுவித் தவனிரு புறத்துலா யமர்கென்
றுவகையாற் கெழீஇ வானதி யாலுவ தொத்துக்
கவரி யந்திர ளிடம்வலந் துள்ளுபு கலவ. (௩௦)

நிலம்ப ழிப்பொரீஇத் தம்மின நிலவமெய் யணிந்த
விலங்கல் வில்லியார் சந்நிதி விராய்ப்படம் விரித்து
மலர்ந்த வோகையா னுகர்மொய்த் தாடுதேன் மான
வலங்க ரித்தசாந் தாற்றிக ளலங்கலோ டலங்க. (௩௧)

பெண்ட கைப்பரை யிமாசலத் தெம்வயிற் பிறந்தாள்
கொண்ட னேர்களன் வார்குழை யாவெமைக் கொண்டா
னெண்டரும் பெரும் பேறிவை யார்க்குறு மென்றுங்
கண்டம் விண்டிடப் பொலம்புரி வலம்புரி யலம்ப. (௩௨)

அன்பு முற்றுபு நாரையின் றேடுநே ரண்மி
முன்பு கூடலி லெங்குலத் தொன்றனை முத்தி
யின்ப ளித்தனை யெந்தைநீ யெமையுமாட் கோடி
யென்ப போலமிக் கோலிடாப் பீலிக ளேங்க. (௩௩)

முடிப டம்பிறைக் கண்ணியாற் கெதிருறீஇ முழவம்
படிப டம்பல ரிழிஞரால் யாமிரு பாலு
மடிப டுந்துய ரகற்றுதல் வேண்டுமென் றங்கண்
வெடிப டுங்குர லான்முறை யிட்டென விம்ம. (௩௪)

தோன்ற லொன்றினுஞ் செய்தறி யாதவோர் தோன்ற
லான்ற முத்தெனத் தன்வயி னுதித்ததற் கன்பா
லேன்ற தாயகைம் மாறுன்று புரிவதே யேய்ப்பச்
சூன்ற வேய்ங்குழல் தோற்றிசை நாற்றிசை சுலவ. (௩௫)

இனிய வேழிசை யாயிசைப் பயனுமா யிலங்குந்
தனிமு தற்குமுன் பிசைப்பதெவ் வாறெனச் சமழ்த்துக்
குனிவ போன்றுபின் கோடிய முகத்தச கோடப்
புனித வீணைசங் கீதமா மதுமழை பொழிய. (௩௬)

தங்கள் கொங்கையைச் சிவணலின் முனிந்தெனத் தாளங்
கொங்கு வார்குழ லரம்பையர் தாக்கொலி குலவ
வங்கண் விஞ்சையர் மகளிர் பண்டயின்ற வாரமிர்தம்
பொங்கி மேல்வழிந் தாலெனப் பாடுபண் பொலிய. (௩௭)

நீடு காலினு லிருந்துழிப் பெயர்தம நிலைமை
நாடி வண்மலர்க் கொம்பருங் கொடிகளு நாணி
வீட மெல்லிய வுருத்திர கணிகையர் விதியா
லாடு நாடகம் யாரையு மகம்புறங் குளிப்ப. (௩௮)

கொம்மை வெம்முலை யுமையொரு பான்மகிழ் கூர
வம்மை யப்பனு யுலகெலா மீன்றுகாத் தருளிச்
செம்மை வேணியிற் கங்கையுந் திங்களுஞ் சேர்த்தி
யெம்மை யாளுடை மணிகண்ட னினிதுவீற் றிருந்தான். (௩௯)

விநாய கப்பிரான் வீரபத் திரப்பெயர் மேலான்
பிநாக பாணியை நிகர்த்துள வைரவப் பெருமான்
சநாத னத்தனிச் சேய்பெருஞ் சாத்தனென் றின்ன
மநாதி யாலளப் பரும்புகழ் மைந்தர்கள் சூழ்ந்தார். (௪0)

மணிநி ரம்பிய வாரிச மலர்மிசை வதிவோன்
பணவ ராவணைப் பரனென விவரிவர் பதத்தை
யுணவும் வேண்டிடி னுமிழவும் வல்லுந ருலப்பில்
கணவர் பார்ப்பதி கணவர்தம் பாங்கெலாங் கனுன்றார். (௪௧)

உட்பெ ருந்தடை யொண்மணிக் கோபுரத் துறையுந்
திட்பெ ருந்தகை நந்திக ளனுஞ்ஞையிற் சென்று
கட்பெ ரும்புனல் காலவீழ்ந் தெழுந்து கைகூப்பி
விட்பெ ருஞ்சுரர் வேதன்மான் முதலியார் மிடைந்தார். (சஉ)

சிலர்க்கு நீண்முடிச் சேகரந் துளக்கினன் சிலர்க்கு
நலத்த புன்னகை நல்கினன் சிலர்க்களி நளின
மலர்க்க டைக்கண்மென் னோக்கினை வழங்கினன் மரபாற்
கலக்கம் வெய்யனேற் கரங்கிய விரங்கிய கடவுள். (சங)

நிறைத ருந்தன தாணையைத் தாங்கினர் நின்று
தறைவி சும்புபா தலமெனு மிவற்றினைத் தவாமன்
முறைசெ யிந்திரன் முதுவிதி முகுந்தனே முன்னோர்
குறைவி னுய்முடித் தனைவர்க்குங் கொடுத்தனன் விடையே. (சச)

நிவப்பொ டோங்குமத் தாணியி லோலக்க நீங்கிக்
குவட்டு தித்தபைங் கோகிலந் தொடரவெங் கோமா
னுவப்பி னைம்பொறி நுகர்பொருண் முழுவது மொருங்கித்
தவச்சி றந்தொளி திவளக வுவளகஞ் சார்ந்தான். (சரு)

## வேறு.

வாம்பரி யிரதத் தென்றாழ் மண்டல மானத் தேசு
தூம்பரி யங்கத் தும்பர்த் தூலஞ்செம் பஞ்சி பூனை
தாம்பரி யனிச்ச மன்னத் தூவியிஃ தலவப் பெய்து
பூம்பரி வட்டப் பட்டுப் போர்த்தமெல் லமளி புக்கான். (சசு)

வெம்மைதீர் மழலை யின்சொல் விழுமிய வமுதத் தோடு
மும்மைகொ ளுலகத் தில்லா முதிர்சுவை நறும ணத்துச்
செம்மைநால் வகைச்சிற் றுண்டித் தெள்ளமு தத்தை யன்பா
லம்மைகைந் நளினத் தூட்ட வங்காந்து மகிழ்வி னூர்ந்தான். (சஎ)

மாதுளங் கனிவித் தேய்ப்ப வாணகை யைவா சத்தம்
மாதுளங் கனிந்தி தப்பொன் வணத்தகாய்த் திரையன் மென்று
மாதுளங் கனிக ருந்தண் வார்கருங் கூந்தற் கௌரி
மாதுளங் கனிந்து தந்த தம்பல்வாய் வாங்கி யுண்டான். (சஅ)

இருதிறத் தவருந் தங்க ளிதயத்திற் காம வங்கி
பெருகிய பெற்றி நோக்கிப் பெட்டவை வியப்பார் போன்று
மருவுயிர்த் தறக்கு ளிர்ந்த வண்டளக் கலவை வாரி
யொருவர்மே லொருவர் தைவந் துவந்தன ருவரு ளுப்பால். (சகூ)

புவனமன் பதைய னைத்தும் புணர்ச்சியிற் போகந் துய்ப்பான்
சுவணவெற் புச்சி நீலஞ் சுடருமா ணிக்க மாக்கித்
துவர்தர ளம்பு ரிந்து துணைசெய்தல் கழுநீர் செய்து
சிவனுமை வல்லி புல்லிச் சிலம்புபுள் ளொலிவி ளைத்தான். (௫0)

பலப்பல கரண பேதம் பயின்றுமிக் குவகை பொங்க
மலர்த்தகு சயன மன்னி வதிந்தன ளுக வீது
நலத்ததோர் செவ்வி யென்னு நங்கைய ரிலக்க ணங்கட்
கிலக்கிய மனைய வெம்மோ யெந்தையை யிரந்து கூறும். (௫க)

நைதர வேழை யேழை நம்பிநீ தணந்து கூடற்
கைதவன் தக்க நாமக் கைதவன் கடலிற் சேர்ப்பன்
மைதவழ் குடுமிக் குன்றின் மன்னனென் றின்னோர் மாட்டுப்
பைதறீர் மகளாய்த் தோன்றப் பணித்தனை பல்காற் பண்டு. (௫௨)

ஒருபொழு தானு நின்னை யொரீஇயினி யாற்ற கில்லேன்
பெருமவுன் மேனிப் பாகம் பிரிகலா தெற்றை ஞான்றும்
மருவியா னென்றி வாழ வரந்தரல் வேண்டு மென்ற
வருநறை குமுதம் வார்த்தான் மானவாய் மலர்ந்து சொற்றாள். ()

கருணையே வடிவ மான கவுரியாற் கழறப் பட்ட
பொருளமு தினிது மாந்திப் புந்தியிற் களிகூர்ந் தன்னு
ளிருவிழிச் சுரும்பு லாவு மின்முக கமல நோக்கிப்
பெருகொளி முறுவல் பூத்துப் பிஞ்ஞக னருளா நின்றான். (௫௪)

ஒருமலை யத்துத் தோன்றி யுயரிரு மலையைத் தாங்கிப்
பொருமலை மருங்கு றாது பூண்பிடித் தாங்கி லங்கச்
செருமலை காசின் கோவை செற்றுபொற் கலாபம் வேய்ந்த
திருமலை நின்கு றிப்பு நிரம்பவு மழகி தாமால். (௫௫)

தேவரு மனித்தர் தாமுஞ் சேண்முனி வரரு மற்றை
யாவருஞ் சிறந்த தானத் தெமைவழி பட்டு வேட்ட
மேவரு கிற்ப தான்ற விதியென வுணர்வான் காட்ட
லூவருங் கடனு னக்குச் சராசர முழுது மீன்றாய். (௫௬)

ஆதலாற் பாண்டி நாட்டி லாடானை நகர்க்குத் தென்பாற்
காதமோர் முக்கால் பௌவக் கரைக்குமெற் கதனிற் பாதி
மாதர்கூ ருப்பூர்க் கீழ்சார் வடாதிரு குரோச மாதர்
கோதநீள் கானப் பேர்க்குக் கிழக்கியோ சனையி ரண்டால். (௫௭)

என்னலா மெல்லை யின்க ணினியதண் ணிழல்ப ரப்பி
மன்னிய வளஞ்சேர் நிம்ப வனவயின் வன்மீ கத்துட்
டுன்னுநங் குறிக்குப் பூசை தூறுத்துதி துணைவிற் போகிக்
கன்னலும் பாலுந் தேனுங் கைப்பித்த தீஞ்சொற் பாவாய். (ருஅ)

அங்கள விலக்க ணத்தோ டணிவிடை யூர்ந்து சார்ந்து
பிங்கள நிறத்துச் சோதிப் பிழம்பென மிளிரு நம்மெய்ப்
பங்கள வளாவி யென்றும் பகாதுணை யொன்றச் செய்தும்
மங்கள நிறைந்த திங்கள் வதனப்பைந் தோகா யென்றான். (ருகூ)

அத்திரு வார்த்தை கேட்ட வம்பிகை யகில லோக
கத்திரு நேர்வி னுவுங் கனகவெற் புலாவு மிந்து
வொத்திரு மருங்குஞ் சங்க வொண்குழை வருடுந் தோளாய்
முத்திருள் சிக்கு மிந்த மொய்சுடர்க் கயிலை யாதி. (சூ0)

மேம்படல் கெழீஇப வெண்ணில் வியன்பதி நிலத்தி ருப்ப
வேம்படர் விபினத் தென்னை மேயருச் சித்தி யென்னத்
தேம்படர் மலர்வாய் விண்ட திறனெவன் செப்பு கென்றுட்
கோம்படர் பொருளா யுள்ளா னுதனுயர் புரைக்க லுற்றான். (சூக)

ஆசத்திருவிருத்தம். ௬0௫.
திருக்கைலாயப் படலம் முற்றிற்று.

---

## தலவிசேடப் படலம்.

---

பொன்ற யங்கிய பூண்மு லாய்சகத்
தொன்று மேனைய வூர னைத்தையும்
வென்ற வேனுவின் வெற்றி யூரென
நின்ற தாற்குளிர் நிம்ப கானனம். (க)

திருக்கல் யாணநிற் செய்து தென்னனு
வுருத்த போதுதா ருதவு நீர்மையா
லெருக்கு வேய்சடை பெமக்கு மாதராய்
விருப்ப மிக்கது வேப்பங் காடரோ. (உ)

மலிந்த மல்லலம் மாவ னத்துழி
மெலிந்து வல்வினை விளிய மாந்தர்க்குப்
பொலிந்த நீள்பழம் புற்ற கத்துநம்
மிலிங்க மொன்றெழீஇ யிலங்கு கிற்குமே. (ங)

நரும தாதிய நதமுங் கங்கைமுற்
பெருகு மான்மிய நதியும் பீடுசால்
குரும ணித்தனுக் கோடி யும்பொரா
வொருபெ ருந்தட முங்கண் மன்னுமால். (௪)

கானு வாருளங் கவரு மத்தகு
பானு லாவுபைம் பழுவச் சூழலை
மானு காதெலாம் வனையும் வாணிகோ
னானு மாறியா நகர மாக்கினும். (௫)

அத்த லத்தினை யனைய தோர்தலம்
பைத்த நாகர்வாழ் பாத லத்தொடு
மித்த ராதல மிருவி சும்பெனு
முத்த லத்துளு மின்று மொய்குழால். (௬)

ஒழுக்க மோப்பினா ரானு மொண்டொடீ
விழுப்ப மேந்திரு வெற்றி யூரென
வழுத்தல் வல்லுந ராயின் மற்றவர்
முழுத்த பாதக முற்றும் வற்றுமன். (௭)

பொன்ன ணிக்குவால் பூத்த வல்லிகே
ளென்ன காரணத் தேனு மூன்றுநா
ளன்ன தொன்னக ரடைந்தி கப்பறத்
துன்னி வைகுநர் துறக்கம் வைகுவார். (௮)

அனைய வைப்பிடை யண்மி யாங்குள
புனைத டப்படீஇப் போற்றி நங்குறி
யினைவி லாதுவேப் பிலைய யின்றவர்க்
கெனைய நோய்களு மிரியு மேந்திழாய். (௯)

வேறு கேத்திரம் விரவு மாகுறித்
தாறு போகியா னத்த லத்தினை
மாறு தீர்தர வலம்வைத் தேகுமே
னூறு வன்பவ நூறு மென்மொழீ. (௧௦)

குப்பு கிழ்த்துணை யரும்பு கொம்பனாய்
செயபு ரிக்கியான் செல்வ லின்றெனாக்
கயவ னோர்மகன் கழறு மாயினும்
பயன்மி கப்பெறும் பையுள் பாற்றியே. (௧௧)

வாளி ருஞ்சசி வதன வஞ்சசி
தோளி னன்னலந் துய்க்கும் விண்முழு
தாளி தன்னினு மாவ யிற்சிறு
ஞாளி சீரிது நறிய கூந்தலாய். (௧௨)

நிறந்து றுந்தளிர் நிகர்த்த மெல்லிய
லறந்த ழைத்தொளி ராங்கி யற்கையிற்
பிறந்த சான்றவர் பின்ன ரெம்முல
கிறந்தி டாதுவாழ்ந் திருப்பர் சந்ததம். (௧௩)

வாளு லாம்விழி மங்கை யன்னுழி
மூளு மன்பினுன் முறைவ மூவகை
நாளு நண்ணியார் நமக்க னுக்கராய்
மீளு றுக்கதி விரவு வாரரோ. (௧௪)

காண்டரிற் பெருங் களிசெய் தேறலே
யாண்டு நீதிநூ லாற்றி யங்குபு
மாண்ட மாண்டவர் வடிவெ மைப்பொரப்
பூண்டு நித்தியப் பொலிவின் மன்னுவார். (௧௫)

இவ்வி டைப்பரா யிடைய ருதவட்
புல்லி நம்மையே புந்தி நாடுநர்
மெல்ல வெம்மொடும் வேறறக் கலந்
தெல்லை யற்றபே ரின்ப மார்பவே. (௧௬)

வேறு.

அத்தகு திருப்பதி யகத்தொரு வருக்கு
மெத்திய சுவைத்திறனில் வெற்றடிசி லிட்டோர்
புத்தமுத மொத்தவுண வைப்புற நகர்க்கண்
வித்தகர் பலர்க்குதவு மெய்ப்பய னடைப்பார். (௧௭)

தாதுலர்க லாதபுயல் தாங்கியவிர் மின்னே
போதுலவு பூம்பொழில் சுலாஞ்சய புரிப்பா
லாதுல ருவக்கும்வகை பொய்ப்பொரு ளளித்தோர்
மீதுலகின் மெய்ப்பொருளை மேவிமகிழ் கிற்பார். (௧௮)

அன்னதல ஞாங்கர்நெறி யந்தணர் தமக்கு
நன்னருறு மண்ணகர நல்கிய திறத்தோர்
பொன்னகர மத்தனையு மெய்துபு புரப்பார்
கன்னல்கனி கண்டிவை கலந்தனைய சொல்லீ. (௧௯)

சானுமறை யானெழுகு சைவமறை யோர்க்கு
வாலிய பயத்தபசு வர்க்கமவ ணீந்தோர்
மாலயன் வழுத்துபதி வர்க்கமென வாழ்வார்
வேலைசுதை வெவ்விடம் விராயவுறழ் கண்ணுய். (உ0)

கழிமகிழ்வொ ரைம்பொறி கொளத்தகு கரும்பே
மொழிதருமவ் வூர்வயின் முதிர்ந்தநம தன்பர்க்
கழியுமியற் ருயசிறு வீடுதவு மான்ரே
ரொழிவறு நலத்தபெரு வீடடைத லுண்மை. (உக)

புண்ணிய மனைத்தையும் வளர்த்திலகு பூவா
யண்ணிய பசும்புலொரு கோவுண வளித்தோ
ரெண்ணிய வொணுதபல கோக்களடி யேத்த
மண்ணியல் பினிற்றக வழக்கியர சாள்வார். (உஉ)

மலைக்கிறை தவத்திள மகப்பெறு மடந்தாய்
வலைப்படு வினைத்திற னறுத்திடுமெ வைப்பில்
விலைப்பொருள் கொடுத்தளகை வாங்கியுய விட்டோர்
நிலைத்தளகை நீங்கலர் நிதிக்கிழவ னென்ன. (உங)

முருந்துறழ் செறிந்தநகை மொய்குழலி நோயால்
வருந்துநர ருக்கவண் மருந்துசிறி தானு
மருந்திய வழங்குந ரரும்பெறல சாவா
மருந்துநனி யுண்டுசுர ராகிவதி வாரால். (உச)

பந்திமை தனத்தெரிவை தாகமுதல் பாற
அந்தினறு நீருதவு பந்தரமை வித்தோர்
கந்தமலி யுங்கனக கற்பக மலர்ப்பூம்
பந்தருழை வைகுபு பரிப்பர்விண் ணெருங்கே. (உரு)

பத்தியின் மணித்தொகை பதித்தனபன் மங்கா
யத்தனி நகர்த்தலையெ மாதடி யவர்க்கு
நத்தியொரு வத்திர மளித்தவர்க ளுங்கு
வத்திர மியைந்துபிர மன்பத மிருப்பார். (உசு)

அரவமணி மேகலை யவட்பிரம சாரி
மரபினனெர் கன்னியை மணக்கிய புரிந்தோர்
தரணிமகள் செங்கமலை யென்றிருவர் தம்மை
விரவிநனி யின்புறுவர் விண்டுபத மேலால். (உஎ)

வனத்தொடை வனைந்தமுகில் பின்னர்வரு மின்னே
யனத்தமிரி யப்புரியு மப்புரி யகத்துப்
புனற்பொலி குளத்தினை யகழ்ந்தபுல மிக்கோர்
கனற்பொலி குளம்பெறுப விவ்வளை கலந்து. (௨அ)

சாமிபுகன் மென்மதலை கேட்டுருகு தையா
லேமநகர் வெள்கவொளி ரந்நக ரிடத்துத்
தாமமலர் நீழன்மலி யோர்பொழில் சமைத்தோர்
பூமிமுத லாநிலவு மேழ்பொழில் புரப்ப. (௨௯)

உருமுழுது மாரமு துறத்துறுமு பாவா
யொருவருட மாங்கணிய மத்தொடு முறைந்தோ
ரரிவருட மாதியன பல்வருட மாளாப்
பொருவொருவு நம்முலகு புக்கினி திருப்பார். (௩௦)

அன்னநகர் மான்மிய மளப்பரிய கால
முன்னுபு நிகழ்த்தினு முலப்பதிலை யம்ம
வின்னியல்கொள் சொன்னமயி லின்னினி யிசைப்பாந்
தன்னனைய தீர்த்தநளி தன்னிலொரு தன்னம். (௩௧)

ஆகத்திருவிருத்தம், ௩௩௬.

தலவிசேடப் படலம் முற்றிற்று.

---

## தீர்த்தவிசேடப் படலம்.

செப்பிய தாய சிறந்த பதிக்க
ணொப்பிய லாதந முத்தம லிங்க
திப்பிய சந்நிதி முன்னதொர் தீர்த்த
மிப்பிய நித்தில மேய்க்கு மெயிற்றாய். (௧)

குரவ மணங்கமழ் பூங்குழல் யாம்பண்
டரவ நறும்புன லாடல் குறித்துப்
பரசுமண் ணூன்றிய பாதல கங்கை
விரவலு மோர்தட மாக விதித்தாம். (௨)

வாரண மாமுலை வண்பில கங்கை
சீரண வும்பர சாயுத தீர்த்தம்
பூரண நீர்ச்சிவ புட்கர மென்னக்
காரண நாம்பல மேமது கண்டாய். (௩)

பேசு கிளிப்பெடை நாசிகை பெட்குந்
தேசுகிர் கொண்ட செழுங்கொடி பின்னர்க்
காசு கிடந்தொளி ரன்ன கயந்தான்
வாசுகி வாவி யெனப்படு மாதோ. (ச)

மனதட னீங்க வசிக்கு மடந்தாய்
நினதட வாள்விழி நேர வகன்ற
வனதட மூழ்குந ராங்கயி ராணி
தனதட மூழ்குவ ரின்பு ததும்ப. (ரு)

வேண்டன் முகிழ்த்து மெய்யன்பு மலர்ந்து
மாண்டகு மின்ப மதுப்பொழி கொம்பக்
காண்டரு நீரின்முக் காலமிழ் கிற்போ
ராண்டொரு காலு மளற்றமி ழாரால். (சு)

தரள வடத்தரு வித்தன சைலீ
மரபுளி நூனெறி சற்றும் வழாமே
வரமலி கின்றவவ் வாரி படிந்தோர்
பரசுக வாரி படிந்திறு மாப்பார். (எ)

வாட்கட கக்கை வயங்கு கரும்பாய்
வேட்கட னல்கு விநோதை யதன்க
ணுட்கடன் முற்று நிரப்பு நலத்தோர்
கோட்கடன் முற்றும் வறந்து குறைந்து. (அ)

எண்பயன் யாவையு மீந்து களிக்குங்
கண்பய மோது கனங்குழை யஃதிற்
றண்பய மாந்துநர் தாயர்கள் கொங்கை
வண்பய மாந்தலர் மற்று முதித்து. (கூ)

காவி சவட்டு கருங்கணி யந்த
வாவியில் யாக்கை யழுக்கினை மாற்ற
மேவி யறக்குடை வார்க்கு விடாத
வாவி யழுக்கு மகன்றிடு மன்றே. (க0)

மாங்குயி லேங்க வயங்குசொன் மங்கா
யாங்கு நவின்ற விலஞ்சி யடுத்துத்
தாங்குடை வாரதி பாதக சால
மோங்கு தழற்படு தூய்த்திர ளொக்கும். (கக)

நித்திய கன்னியக் நீர்நிலை சித்த
சுத்தி யளிப்பது தோமற நம்பாற்
பத்தி யளிப்பது பன்னு துரீய
முத்தி யளிப்பது மூழ்கற வோர்க்கு. (கஉ)

வண்டு சுழன்று மகிழ்ந்து முரன்று
கிண்டு கருங்குழல் கேண்மதி மேல்யாம்
விண்டுள தீர்த்த விசேடம் விளங்கப்
பண்டு நிகழ்ந்தவோர் காதை பணிப்பாம். (கங)

வேறு.

முழங்குதமிழ்த் தென்னுட்டு முன்னுட்டு தேவையெனும்
பழம்பதியின் மகபதியும் பார்த்துநறு முறுப்பெய்தப்
பிழம்பியபல் வளம்படைத்துப் பிறங்குதன வணிக்குலத்து
வழங்குபெருங் குடிப்பிறந்து வளர்ந்தனனு லொருமைந்தன். ()

அவன்ஞான சீலனென வபிதானஞ் சுமந்துள்ளா
னெவரேனுந் தாமாக வெதிர்கண்டா ரிணைவிழியைக்
கவர்யாண ருருவுடையான் கருத்துருக்குங் கனிமொழியா
னுவமான மொரீஇக்கலைக ளொருங்குணர்நுண் மதியாளன். (கரு)

ஊரேறு போற்செருக்கி யுலாவுவான் பிறர்க்குரிய
வாரேறு வனமுலையார் வலிந்தணைப்ப நலனுகர்ந்துங்
காரேறு கடுங்காமங் கன்றியிளங் கன்னியரை
நாரேறு மாவசித்து நயந்துதழு வியுங்களிப்பான். (கசு)

கரவடத்தாற் றாழ்வடமாங் கண்மணியுந் திருநீறும்
விரவியமெய்ப் புனைந்தெமது மெய்யன்பர் தகநடித்து
வரமலிகற் பரிவையர்க்கு மருள்கொளுத்தி யுபதேசக்
குரவுதரித் துடலாதி யனையர்தரக் கொண்டப்பால். (கஎ)

நிருவாண தீக்கையிதென் றவர்துகிலை நெகிழ்த்துப்பின்
வெருவாதி ரினிப்பரிச தீக்கைவிதி விளைத்துமெனத்
திருநேரந் நலருறுப்புந் தன்னுறுப்புஞ் செறிவித்து
மருவாநின் றின்புண்டு வரம்பிலரை நிறைதவிர்த்தான். (கஅ)

சோதரியை மூத்தவர்தந் துணைவியரை மருகியரைப்
பேதமக னெறிமறையோர் பெண்டிரைச்சை வாசிரியர்
மாதரைச்சங் கரசாதி மடவாரைக் கைமையரை
யாதரவிற் புணர்ந்துழன்று னறவினையொன்ற றியாதான். (கக)

மிக்கினிது மெய்க்கிதென விளம்புபுதை யலர்க்குத்தன்
சுக்கிலநன் றாட்டியவர் சோணிதத்தைத் தான்மடுப்பான்
புக்கிறமி மானுரைப் புலிபோற்பாய்ந் தீர்த்தாலே
யிக்கினெரித் தணைந்தொழிவா னென்செய்வா ரேழையரே. (உ0)

ஓவச்ச மனக்கொடிய வுவனந்தோ மதவெறியாற்
கோவச்ச முதல்விலங்கின் குழுவலறத் தழுவலூறீஇப்
பாவச்ச ரக்கேற்றிப் படர்கலமாய்ப் பல்பிணிப்பார்
நீவச்சங் கடமெய்திப் பக்குவிடா நிலைதளர்ந்தான். (உக)

துறவரையுஞ் சுரரையுநந் தொண்டரையு மவதித்துப்
பிறருரிமைப் பொருள்கரவாற் பெட்டுமுறை பிறழ்ந்தீட்டி
மறமலியுங் கொலைபுலைபொய் மதுநுகர்ச்சி யாதியவா
மிறலரிய பாதகங்க ளனைப்பலவும் பெரிதிழைத்தான். (உஉ)

இவ்வண்ண முழிதருவாற் கிருங்கல்வி யுணர்வுதிப்ப
வெவ்வண்ணக் கூற்றியற்றும் விழுமநினைந் தினியளியே
னெவ்வண்ண முய்வலென விதயத்தின் வெருவந்தெஞ்
செவ்வண்ணச் சரண்சரணூந் திறந்தெளிந்தான் றிருவருளால். ()

நாமகிழ்வின் வீற்றிருக்கு நலத்ததலம் பலபுக்குப்
பூமருவு கங்கைமுதற் புனிதநீர் படிந்தாடி
யேமணவு மிலிங்காதி யெண்ணிறந்த மூர்த்தியெலாந்
தோமகலச் சூழ்ந்திறைஞ்சித் துதித்துருகித் தொழுதனனால். ()

வாசமலர் நந்தவனம் வளங்குலவும் படியிருவி
யேசறுபூங் கோயில்களி லியன்றதிருப் பணியியற்றிப்
பேசவரும் பெருஞ்சாந்தி பிறழாமை யினிதுஞற்றித்
தேசமகிழ் கொளப்புரிந்தான் சிறந்தபிற புண்ணியமும். (உரு)

மழைபொருவு கொடைபொறைமுன் மாண்குணமுற் றெருங்க [மைந்தும்
பழையதொரு வாதனையாற் பழிபாவம் பகையச்சந்
தழையநனி துறுத்துபர தாரகம ஞதிபவம் [ றூன்.
விழைவொழியான் மந்தணத்தின மென்மெலச்செய் தொழுகுற்

அகந்தூய்மை யெனக்கின்னு மணுகிலதென் னன்றேவென்
றுகந்தோங்கு துயருழந்துள் ளுடைந்தயர்வா னெருவைகல்
சகந்தாஞ்சீ ராடானைத் தலம்போற்றப் படர்கின்றோ
னிகந்தாறு திரிந்தொதுங்கி வெற்றிநக ரிடைப்புக்கான். (உஎ)

மின்னகுபொன் மணிக்கோயில் விமானத்தை யெதிர்நோக்கி
யின்னதுமெம் பெருமானா ரின்னருளா மெனத்தொழுது
பன்னமலர் கொடிதுவன்றிச் சித்திரகம் பலம்விரித்தா
லன்னவெழி லன்னமலி யன்னதடத் தண்முதலும். (உஅ)

பெரும்பாரச் சாகாட்டுப் பிணிப்பொருவு பெற்றமெனக்
கரும்பாவக் கட்டவிழ்ந்து களிதுளும்பி யிதுகாறு
மரும்பாத வாநந்த மளியேனுக் கின்றீண்ட
வரும்பான்மை யெவனென்று விரும்பூது மனக்கொண்டான். ()

பின்பந்த விரிநீரிற் பிறங்கியநூல் விதிவழுவா
தன்பந்த மின்றியெழ வமிழ்ந்தாடி வாதனையாம்
வன்பந்த நீங்கியர வாய்த்தீர்ந்த மதிமான
வின்பந்த வாவுளத்தா னிலங்கினன்மெய் யொளிகெழுமி. (௩0)

பூதியொடு சாதனமும் புறம்வனைந்தஞ் செழுத்தோடு
நீதிநெறி யகம்புனைந்து நிரம்பியர்காட் கடன்கழிப்பிச்
சோதிவளர் நங்குறியைத் துன்னிவழி பாடாற்றி
வீதிதொறு மணிகிடந்து மிளிர்தனதூர் மீண்டடைந்தான். (௩க)

உரியமகப் பேறுமுத லுயர்செல்வ முறப்படைத்துத்
துரிசிலறம் பலபுரிந்து தொன்னிலத்துப் புகழ்பரப்பிச்
சரியைகிரி யாயோக சன்மார்க்க முறையெய்தித்
தெரிவரிய சித்தாந்தத் திறஞ்சார்ந்தார்க் கறிவுறுத்து. (௩உ)

நாறுண்டு கருவிகளி னூனமொரீஇப் போகம்பல்
வேறுண்டு விண்ணரசின் மிகநுகர்ந்து பற்றற்று
மாறுண்டு புவிமுழுதும் வழுத்தவிளங் கினனவனீண்
டேறுண்டு நடவுமெம திணையடிக்கீழ் வாழ்கின்றான். (௩௩)

அனையசிவ தீர்த்தத்தின் மான்மியமுற் றளவிட்டுப்
புனையவெனி னெடுங்காலம் போதாதா லினிக்கண்டார்
வினையிருடீர் தரச்சவட்டி வீறுசுட ரிலிங்கநலந்
தனையினிது தவச்சுருக்கிச் சாற்றுதுமுன் கோற்றொடியே. (௩ச)

ஆகத்திருவிருத்தம். ௩எ0.

தீர்த்தவிசேடப் படலம் முற்றிற்று.

---

# மூர்த்தி விசேடப் படலம்.

பாமம் புராசிசூழ் பார்பிலம் விண்யாவும்
வாமம் புடன்வரும் வார்குழலி யங்க
ணேமம் புகுந்தவ ரெய்தவுறை மூர்த்தி
நாமம் புராதன வன்மீக நாதன். (க)

பானேர் நறுஞ்சுவை பல்குமொழி நல்லா
யானே றுகைக்குநம் மாரருளி னஃது
வானே மனேமுதல் வந்தணையு முந்தத்
தானே முளைத்தவட் டங்கியதை யன்றே. (உ)

தீங்கரிய வண்பயந் தேனுவுட லெங்குந்
தேங்கினு முலைத்தலைச் செற்றிவெளிப் பட்டாங்
கியாங்கணு நிரந்தரம் யாம்வதிது மேனு
மாங்குறு குறிக்கணே தோன்றுவ மணங்கே. (௩)

எண்ணினுயிர் மாட்டுநம் மின்னருளுண் டேனுந்
தண்ணளி தொழும்பர்பாற் சாலுமது மான
வுண்ணசை யெவற்றுளு மூங்கதி லெமக்காம்
வெண்ணகைய செந்துவர் வாய்ப்பசிய மின்னே. (௪)

எக்குறி யிடத்தும்யாம் பால்விரவு செய்யிற்
புக்குமறை வாகியே பொற்பவிருக் கின்று
மக்குறி வயிற்றயிர் செய்யென வமர்ந்தா
நக்குலவு நித்திலத் தாமமுலை நங்காய். (௫)

வேறு.

அதனை யன்பி னலரி குணதிசை
யுதய காலத் தொருமுறை நோக்கினோர்
சதத மெம்பெருஞ் சாலோக் கியத்தனிப்
பதவி யெய்துவர் பண்கனி மென்சொலாய். (௬)

உச்சிப் போழ்தத் ததனை யுருகுபு
நச்சிப் போற்றிய நானில மானவர்
சச்சித் தாயநஞ் சாமீப்பி யப்பதத்
திச்சித் துள்ளவுண் டேமாப்ப ரேந்திழாய். (௭)

தீய தீர்க்குமத் திப்பிய லிங்கத்தைச்
சாய நேரத்துச் சந்தித்து வந்தித்தோர்
தாயி னல்லவெஞ் சாரூப் பியநிலை
மேயி ருப்பர் மிளிர்தளிர் மேனியாய். (அ)

கொத்து வார்கருங் கூந்தலங் நீள்குறி
யத்த யாமத்தி லார்வத் திறைஞ்சினோர்
தத்து வாதீத சாயுச்சி யம்பெறீஇச்
சுத்த வாநந்தந் துய்ப்பர் சரதமே. (கூ)

புற்றி டங்கொள் புனிதவம் மூர்த்திக்குத்
துற்ற கோயில் விமானம் பொற்றாவிகை
சுற்று மண்டபஞ் சூழ்மதில் கோபுர
மற்று றுப்பும் வகுத்திடும் புண்ணியர். (கO)

வாச நந்தனம் வைத்து வளர்த்துளார்
காசில் போது கஞலத் தொடுக்குநர்
தேசு லாவத் திருவிளக் கிட்டவ
ராசை யால்விரைத் தூப மளிப்பவர். (கக)

நாவி பாளிதஞ் சந்தன நல்குவோர்
ஆவி னெய்யளி துத்தமுன் னூர்த்துவார்
கோவி லுள்ளகங் கூவல் புறப்புறன்
வாவி யாதிய தொட்டு வணைபவர். (கஉ)

அலர்த்தொ ளிக்கல னுடை நிவேதன
நலத்த பூசைக்கு நண்ணிய வேணைய
கலப்பை யுள்ளக் களிப்பி னளிக்குநர்
விலக்கொ ணாத விழாச்சிறப் பாற்றுவோர். (கந)

என்றி யம்பு மிணைய ரிருவினை
நின்று நீங்கி நிலனெருங் காண்டுபின்
மன்ற நம்பக்கல் வந்தனர் வைகலும்
பொன்று றுப்பர போக நுகர்வரால். (கச)

கேழி ளந்தளிர் வீழக் கிளரியால்
வாழி யக்குறி மன்னிய வாலயச்
சூழல் சூழ்வரச் சூழ்நரைச் சூழ்வன
பாழி நல்லறப் பால முழுதுமே. (கரு)

மணந்து செய்த்தற மைத்து நெறிப்புரிஇப்
புணர்ந்து வார்ந்து புரிந்தமெல் லோதியா
யிணங்கு மன்பினச் சோதி யிலிங்கநேர்
வணங்கு வாரை வணங்குவர் வானவர். (கசு)

போது மீது பொலிமட வார்பணி
காது காது கருந்தடங் கட்பராய்
பாது காக்கும் பழம்புற்று நாதனென்
றோது வார்பெய ரோதுப மாலயன். (கஎ)

காரொத் தான்கல வத்துகிர் வல்லிசேர்
சீரத் தண்கடற் சீர்கொள் விலோசனீ
வாரத் தாற்பண்டை வன்மிக லிங்கமென்
பேரைக் கேட்டனம் பேர்பல கேட்டல்போன். (கஅ)

எத்த லத்துச் சிவணி யிருப்பினு
நித்த லுந்துயி னீப்புழி யன்னநஞ்
சுத்த மேனி தொழாநின் றெழுபவர்
முத்தர் முத்தன முத்தன மூரலாய். (ககூ)

வள்ளப் பொம்மல் வனமுலை மாதரா
யள்ளத் தக்க வழகிற்றம் மூர்த்தியை
யுள்ளத் துள்ளுற வுள்ளிய வொள்ளியர்
வெள்ளப் பேரின்ப வெள்ளத் தழுந்துவார். (உ0)

வெம்மை நெஞ்சின் மிடைந்தடைந் தார்க்கெலா
மம்மை யின்பய னுர்த்துவ மற்றைய
செம்மை மல்குபு சீர்த்தவம் மூர்த்திதா
னிம்மை யேதரு மெவ்வகைச் செல்வமும். (உக)

காவி நேர்விழிக் காரிகைக் காரிகை
தாவி லாதவத் தாணுவைப் பேணுவார்க்
காவ யிற்றெல் லறம் பொரு ளின்பமென்
மூவ கைப்பயன் முற்றுமன் முற்றுமன். (உஉ)

நத்து வார்க்கது நன்னிதி யாக்கமுஞ்
சத்து ருக்கள் சமழ்ப்புறு வென்றியும்
பொத்து நோயின்றிப் பூரண வாயுள்கூர்
புத்தி ரப்பெரும் பேறும் புகுத்துமே. (உங)

சீர்த்தி யும்மணி மாதியெண் சித்தியும்
பூர்த்தி சாலேம் பொறியி னுகர்ச்சியு
மார்த்தி தீர்நிறை கல்வியு மத்தகு
மூர்த்தி நல்கு முகமலர்ப் பொற்கொடீ. (உச)

அத்தி ருக்குறி தன்னை யனுதினம்
பத்தி யோடு வழிபடும் பான்மையர்
கொத்தி ரும்பவக் கூட்டர வோட்டர
முத்தி சார்தன் மொழியவும் வேண்டுமோ. (உரு)

அன்ன தாய விலிங்கத் தகன்சிறப்
பின்னு மெண்ணருங் கால மெடுத்தியாம்
பன்னு கிற்பினுஞ் சற்றும் பறைவதின்
றென்ன வாய்விண் டிறுத்தன னெம்பிரான். (உசு)

உயிர னைத்து மயர்வின் றுயிர்த்தருண்
மயிலி யற்பிடி கேட்டு மகிழ்ச்சிபூத்
தயினு திப்படைச் சூற்கரத் தண்ணலைப்
பயிலு மன்பிற் பணிந்து பணிக்கின்றாள். (உஎ)

கரிய சுந்தர கந்தர கந்தர
பிரிவ தற்கும் பிழைத்த லெனையர்க்கு
மரிய நின்விரை யாக்கலி யெள்ளற்கும்
பெரிது நெஞ்சு வெரீஇயினன் பேதையேன். (உஅ)

அருள்வ ழிப்படர்ந் தவ்வழி நோற்புழிப்
பருவ ராதியான் பாணித்த லின்றிநீ
வருதல் வேண்டுமென் றண்மி மறுவலு
மருமலர்க் கழல் வந்தித்து நிற்றலும். (உகூ)

செவ்வ ணங்கெழு மேனிச் சிவனவட்
கவ்வ ணம்புரி வாமென் றபயமீத்
திவ்வ ணங்குட னேகென வேவினன்
றெவ்வ ணங்கு திருநந்தி தேவுக்கூஉய். (௩௦)

மால்வ ரைக்குல மன்பெறு பைந்தொடி
நீல்வி டக்களச் செஞ்சடை நின்மலப்
பால்வி டைப்பரன் பால்விடை பெற்றனம்
போல்வ ழிக்கொண்டோர் மண்டபம் புக்கனள். (௩க)

சோதி மாமணித் தோடொளிர் வார்செவிக்
காதி மீள்கட் கமலினி யென்பவ
ளாதி யாய வணுக்கத் தொழின்மையர்
தாதிமார் கடல் சூழ்தர வைகினள். (௩௨)

அங்க ணப்பனை யம்மை யருச்சிப்பப்
பொங்கு காதலிற் பூமலி வெற்றியூர்க்
கிங்க ணின்று மெழுந்தரு ளும்பெரு
மங்க லத்திறங் கேட்டு மகிழ்ச்சியால். (௩௩)

இந்தி ராணியு மிந்திரை வாணியு
முந்தி டாகினி யோகினி காளியும்
பந்தி யாத்தவப் பார்ப்பனி மார்களு
மந்தில் வானர மாதரொட ண்மினர். (௩௪)

உரிமை சான்ற வுமைக்கரன் மூர்த்திசீர்
தெரிவு றுத்த திறனிது சங்கரப்
பிரியை பாகம் பிரியா வரம்பெற்ற
சரித மின்னினிச் சாற்றுதுங் கேண்மினே. (௩௫)

ஆகத்திருவிருத்தம். ௪0௫.

மூர்த்திவிசேடப்படலம் முற்றிற்று.

---

## பார்வதி பாகம்பிரியா வரம்பெற்ற படலம்.

சார தந்*திரங் கைமுகன் றலைச்சதுர் வேத
சார தந்திரந் தேர்ந்தவ னுணையாற் றளிக்கோர்
சார தந்திரஞ் சிருட்டியென் றிவைசெயத் தக்க
சார தந்திரண் டுறைப்பலர் கணுதிபர் ததைந்தார். (௧)

படிய ளந்தவன் செய்யசூட் டோதிமப் பறவைக்
கொடியு யர்த்தியோன் வச்சிரப் படையுடைக் குரிசில்
கடியு லாவிய கற்பகக் கண்ணியர் கதிர்க்கு
முடிகொண் முப்பதின் மூவரு மாவயின் மொய்த்தார். (௨)

---

* சாரசம் சாரதமென் றாயிற்று, ஆதனம்போல.

கருடர் பாதல வாசிக விருடிபுங் கவர்கந்
தருவர் சித்தரி யக்கர்கின் னரர்விச்சா தரர்கிம்
புருடர் போகமா பூமியர் பூதர்பை சாசர்
நிருதர் தைத்திய ராதியர் குழீஇயினர் நிரைந்தார். (௩)

அன்ன காலையி லகிலமு மளித்தவ டிருமுன்
மன்னி நந்திகள் வாய்புதைத் தணிமுடி வணக்கிப்
பொன்னின் வெண்மணி யித்தகு சிவிகையிற் பொற்ப
வென்னை யாளுடை நாயகி யிவர்ந்தரு ளெனலும். (௪)

ஈன்று காப்பவ ளம்மணி யானமேற் கொண்டு
மூன்று வேதமு முபநிடத் தொகுதியு முழங்கச்
சான்ற வந்தியர் சூதர்நின் றேத்தொலி தழைப்ப
வான்ற கற்பக நறியபொன் னலர்மழை பொழிய. (௫)

முரசு பேரிகை குடமுழா மோந்தைகள் முருடு
சரள மத்தளந் தகுணிச்சந் தக்கையுந் தழங்க
வுரவு நீர்வளை வயிர்குழல் காகள முலம்ப
விரத வின்மது வார்த்தெனச் சகோடயா ழிசைப்ப. (௬)

கவிகை யுந்தழைப் பிச்சமுஞ் சாமரைக் காடுஞ்
சிவிறி யோடசாந் தாற்றியுங் கேதனத் திரளு
மவிரு நித்திலப் பந்தருந் தோரண வடுக்குஞ்
செவிய ஞாயிறு போயிறு மாநிழல் செய்ய. (௭)

தரும நல்லுருத் தண்டிகைத் தண்டினைக் காவிப்
பரும வல்குலா ருருத்திர மடந்தையர் படர
விருமருங்கினு மிருநிறத் தாமரை யிருக்கை
மருவு மாதரார் வழியுழி வளனுரைத் தேக. (௮)

சுகந்த மெல்லிலைச் சுருள்சசி துணைக்கரத் துய்ப்ப
விகந்த வொப்புடை யுருப்பசி படியக மேந்த
வகந்த குந்தனத் தரம்பைபாங் கடைப்பைகொண் டணையத்
திகந்த நாறுபூங் கோடிகந் திலோத்தமை பரிப்ப. (௯)

சவிய வஞ்சலி தொழற்குரி முழுமுதற் றலைவ
னவிய மேந்தியென் றுணர்த்தியாங் கவற்குமுன் னல்கிப்
புவியில் வந்தொரு மின்கொடி புடைபெயர்ந் தென்ன
வவிந யத்தொடு மேனகை நாட்டிய மயர. (௧௦)

நத்தி ராகிகர் கதுப்பினர் விஞ்சையர் நல்லார்
பத்தி ராகதா ளங்களின் விதிவழார் பாட
வொத்தி ராதழ லழற்றுகற் பருந்ததி யுலோபா
முத்தி ராதியர் சூழ்ந்துபல் லாண்டிசை மொழிய. (௧௧)

கங்கை காளிந்தி யிருவருங் கவரிகள் புரட்டத்
துங்க பத்திரை கோதமை பனிப்புன றுளிப்பப்
பொங்கு தாமிர பன்னியும் பொன்னியும் புன்கா
லங்கு மெல்லென வுலாவுமா விருந்தரே ரசைப்ப. (௧௨)

பீத வம்பர வகைபல வடுக்கிய பேழை
யாத ரம்பெரு கரதன வணிகலப் பரணி
சீத ளப்பரி மளத்தளக் கலவையஞ் செப்பென்
றோத நின்றவின் னேரன்ன கொடுசில ரொதுங்க. (௧௩)

பூவின் மென்சிறைச் செய்யவாய்ப் பைங்கிளி பூவை
தாவி மேவிய வோவியப் பஞ்சரந் தாங்கி
யாவி யொண்பெடை யோடவைக் காரமு தருத்தி
யோவி றன்பெயர் பயிற்றின ரொருசிலர் செல்ல. (௧௪)

சுருள்ப டம்பிணர்க் கோட்டிளந் தூத்தகர் யூகந்
திரிம ருப்பின வெள்ளிய புள்ளிய சிறப்பின்
மருளு நோக்கத்த கவர்த்தடர் குரத்தன மானென்
றெரிபொன் னீடொடர் யாத்தனர் சிலர்பிடித் தியங்க. (௧௫)

மிடற்ற னிச்சயை விசயையை முதலிய மின்னு
ருடற்று வெஞ்சமர் வென்றிய ராணுடை யுடுத்துத்
தடற்றி னீங்கிய நாந்தகந் தடக்கையிற் பற்றுக்
கடற்று மங்கையர் குழாத்தினைச் சுலவினர் காப்ப. (௧௬)

அணிவ குத்தனர் சாரத ரண்மையர் தொடரப்
பணிலம் வாள்கதை சார்ங்கம்விட் பரிதிநேர் பரிதி
திணிபு யத்திடைச் சேக்கியோன் றேமலர்ச் செம்மல்
கணித மில்சுர ரேற்றன பணிபுரீஇக் கலவ. (௧௭)

இரத பந்திகண் மரக்கல மிப்த்தொகை மகரம்
புரவி வாந்திரை பல்லியந் துவைப்பொலி பூசல்
பிரச வார்குழ லார்துகிர்க் கொடியெனப் பெற்றும்
பரவு தானைவே றொருபெரும் புணரியிற் படர. (௧௮)

பிரம்பி னந்தியம் பிரான்சனம் பிரித்துமுன் போத
விரண்டு மூன்றுநான் கைந்தெனு முலகினு ளின்ன
வுரந்த ரித்தபூ மண்டல மொன்றுமே யுகப்பப்
பரந்த வொன்பதி னவாசிமா திரம்வரம் படைப்ப. (கக)

ஆக்கு நான்முகத் தண்ணலை யாக்குவாள் வந்தாள்
காக்கு மாநிறக் கடவுளைக் காப்பவள் வந்தாள்
வீக்கு நாதனு ருயிர்த்துணை மெல்லியள் வந்தாள்
கோக்கு மாரிவந் தாளெனத் திருச்சின்னங் குளிற. (உ0)

கொழுந்த ரும்புபோ தலர்துறு குளிர்பொழி லூடு
மழுங்க லாவெழிற் சாயல்கூர் மயிலினஞ் சூழ
வொழுங்கு தூவிய வரசவன் னத்தினை யூர்ந்து
செழுங்கு யிற்பெடை செல்வது சிவணிய சென்றாள். (உக)

இந்த வாறெழுந் தருளுகின் றுழியிள வேனில்
வந்த தாகமங் கலையெனப் பெயரிய மாது
கந்த சாமியைப் பயந்தவக் கவுரியைக் காட்டி
முந்த நீடதர் மல்லல்கண் மொழிதர லுற்றாள். (உஉ)

உந்த நான்முகில் சூடியி னீயுயர் புணர்த்தக்
கொந்த ணிப்புயற் குழூஉப்புனை. தாங்கொளிர் கோதாய்
சந்த னுதிய தருவிடை யிடறுபு தளர்ந்து
மந்த முற்றெனத் தென்றல்பை பயத்தவழ் வதுபார். (உஙு)

ஈரத் தோர்கலை மிலேச்சியின் மிக்கனை யெனயாந்
தேரப் பான்மதி தரித்தெனத் திகழ்குளச் செல்வி
யாரத் தோடகில் வாசநின் னியன்மணத் தடங்கிச்
சீரற் கத்துவி தத்திறந் தெளிப்பது நோக்காய். (உச)

பெரும்பி னாகபா ணியிற்சிறந் தாயெனல் பிறக்கக்
கருந்த னுத்துணை யணிந்தெனக் கவினுதற் கன்னி
யிருங்கு றிஞ்சிநின் படைக்குவெப் பறக்குடை யெடுத்தாங்
கொருங்கு மீயலர் கோங்குக ளோங்குவ காண்டி. (உரு)

மானெ னேந்தியிற் சீர்த்தனை யென்பது வயக்கக்
கானென் றேர்மறி யிரண்டணிந் தெனமிளிர் கண்ணாய்
வானென் றுன்வர வோர்ந்துபொன் மாரிபெய் தாங்குத்
தேனென் றெண்மலர் செழுங்கணி சிதர்ப்பன தெரிதி. (உசு)

உலகெ லாமுணர் வரும்பிரா னுள்ளமு முயிருங்
குலவி யாடுவான் குயிற்றிய வூசல்போல் குழையா
யலகி லாதநின் பரிசனக் கடிகளே வாமை
யிலகு பூந்தளிர் செயலையூழ்த் தியைப்பன பாராய். (உஎ)

ஆல முண்டவ னனைத்துறப் பழகையு நோக்குங்
கோல மல்கொளித் தருப்பண மிதுனம்வீழ் கொடிற்று
யேல வெற்புனை நடைபெற விரந்துகை விரிப்ப
போல வாயவிழ் தோன்றிகள் பொலிவன காணாய். (உஅ)

உறந்த சாதியம் போதுசம் பகமண முயிர்ப்பச்
சிறந்த வேதுவெ னென்றரன் கருதுநா சிகையா
யறங்கொ ணின்னரு ளொழுக்கினைச் சமழ்த்தழித் தாங்குக்
கறங்கு வெள்ளரு வித்திரள் சுருங்குவ காணாய். (உகூ)

சாதிச் செந்துகி ரமிழ்துகா றன்மையா தென்று
வாதிக் கோன்சுவைத் தற்புத மணவித ழமலா
யோதித் துன்புரைத் துன்முனே விட்டென வொகரஞ்
சோதித் தோகையை யொடுக்கிமிக் கேங்குவ சுலாய்க்காண். (௩௦)

ஓங்கு தாடிமக் கனிவிதை தரளமென் றுவற்றைத்
தாங்கி யற்கையிற் செயற்கையின் வென்றதந் தத்தா
யீங்கு நீபடர் வுணர்ந்துசே யிட்டகா வணம்போற்
பாங்கு மாதவி படர்ந்துமேற் செற்றிய பாராய். (௩௧)

சொல்லு ஞான்றுநே ரன்மையைத் துற்றரக் காம்ப
லல்லி நாமுற வணிகிளர் செய்யவா யணங்கே
பல்ல ரம்பையி னெட்டிலை துவக்குவேய் பந்தர்ப்
புல்லி நாட்டுபைந் துகிற்கொடி புரைவன நோக்காய். (௩௨)

உறுப்ப னைத்துளும் பொதியமு துவட்டெடுத் தொழுகிப்
புறத்து வாய்வழிப் பொங்கியாங் கிளநகை புரிவாய்
சிறுத்த புன்மைதா மகற்றநிற் பணிவன சிவணக்
கறுத்து மென்றினை முதிர்கதிர் கவிழுமா காணாய். (௩௩)

கண்டு கன்முதற் கலப்புறுங் கோதளாங் கரும்பு
மண்டு பால்பரி ணமிக்குமென் றெள்ளுசொன் மடவாய்
வண்டு பொன்னலர் மதுநுகர் வரத்தினை நின்பால்
விண்டி ரப்பபோற் குறிஞ்சிப்பண் மிழற்றுவ நோக்காய். (௩௪)

சீர்க்கு நம்பிரா னுனனச் செங்கதிர் செவ்வே
பார்க்கி னன்றலர் வரசரோ ருகமுகப் பாவாய்
தேக்கில் வார்கறிக் கொடிவழி முசுக்கலே சென்று
மீக்கு லாய்க்கழைக் கூத்தரின் மிளிர்வன பாராய். (ரு௫)

ஒருபு றத்தொலி வழங்குகோ டிகழ்ந்தர னென்றி
மருவு காலேயெண் வகையொலி தருகள வனிதா
யுருவ வாவித்தம் மினங்கொலி துணேவியென் றுன்னே
வெருவி யாங்கரி கரியிரி விம்மிதங் காணுய். (ருசு)

பணேகண் ணீர்முத்த முகுப்பவென் றறக்கடல் பரிவா
லணேபு துஞ்சநீ டணேநிக ரலங்கலந் தோளா
யிணேயி னின்வர வளக்கர்மாற் கியம்பவோட் டருவ
துணேய வல்விரைஇக் கலுழிசெலீ ரூற்றமும் பாராய். (ருஎ)

திவவி யாழ்சமழ்த் தெனமுகங் கோடுபு திருமத்
தவவி ளங்குகங் கணகண கூர்ப்பரத் தையா
லுவமை தீர்நினே மகிழ்ந்தெதிர் கொள்ளும்வின் டொப்ப
விவறு பூந்துணர்ப் பூவைநே ரிலங்கெழில் பாராய். (ருஅ)

கோட லெற்றைக்குஞ் சிவணல கொடுத்தலே பயில்வ
வாட கக்கொடி தளிர்த்தன வகங்கையெ மம்மே
யிட ரங்குனே யரிபணிந் தேர்ந்தெனக் காசைக்
காட லர்ந்துமென் காவினுற் றூழ்ந்தெழல் காணுய். (ருகூ)

அடன்ம தற்றெறு கடவுளு மாலுநின் னழகாங்
கடல கத்துகள் கெளிறுற ழுங்குலிக் கன்னீ
வடிவி னுக்குடை யரம்பைய ரெயிற்றினம் வெளவிக்
குடவி மார்செறித் தாங்கொளிர் குருந்தரும் பெதிராய். (சo)

தத்தை யிற்பதின் மடங்குயர்ந் தனேயென றகவப்
பத்து மூக்கணிந் தாங்கவிர் கையுகிர்ப் பாவாய்
நத்தி நிற்கண்டு புறவமா நங்கைபுன் னகைசெய்
வொத்து மாலதி முகிழ்ப்பதை யுவப்பொடு நோக்காய். (சக)

ஒருங்க டுங்கடு வுண்டவற் குய்யுமா றாட்டு
மருந்து தேங்கிய மணித்தலே வள்ளநேர் முலேயா
யிருந்திண் வேந்தினேப் புணர்குறும் பெனமயி லெய்ப்புத்
தெருண்டு கோழிபுன் சிறைவிரித் தாலுவ தெரிதி. (சஉ)

தழைத்த வுந்தியஞ் சுழியெழீஇத் தனிமுகி ழிரண்டை
யுழைக்கொள் வாரிச நாளமென் மயிரொழுங் குடையாய்
மழைக் கணிபசு பதிதுணை யாதலின் மகிழ்கூர்ந்
தழைப்ப போலவம் மாவெனும் பசுவணி நோக்காய். (சங)

நராய ணன்றனைப் பரித்தவோர் பச்சிலை நாணச்
சராச ரக்குழு வனைத்தையுந் தரிக்குமு தரத்தாய்
வராக மோவெ நின்முனிற் பஞ்சுபு வையத்
துராய தீவினை யிரிவன வுறழ்வன பாராய். (சச)

முன்பு ரைத்தவா வயின்வயின் மூவுல கடங்கிற்
றென்ப தற்கறி குறிவைத்தாங் கொளிர்மடிப் பெம்மோ
யின்ப வள்ளியை யிளையசேய்க் கிந்தசம் பந்தத்
தன்பி னிற்றொடர்ந் தாங்குமா னணைவன காணாய். (சரு)

ஒண்ட லைப்படங் கீழுற வுடலமேக் குயர்த்த
குண்ட லித்திறங் குறிப்பிக்குங் குய்யநுண் ணிடையாய்
பண்ட ரன்கணு வுயரி னுன்னுழைப் பத்தி
கொண்டு ளாரெனக் குழலிசை கோவரை நோக்காய். (சகா)

மரங்கொன் மால்கரிப் புழைக்கையுள் ளீடின்றி வணங்கத்
திரண்டு மெத்தென வழுவழுத் தொளிர்கவான் றெரிவாய்
நிரந்த பாசடை நீன்மல ரோடைக ணின்பால்
வரங்கி டக்குமெய்க் கண்ணினர் மானுவ பாராய். (சஎ)

உளங்க லங்குபு ஞெண்டுசேற் றளைபுகுந் தொளிப்ப
வளங்கு லாவிய மாமைசால் சானுவின் மங்காய்
துளங்கு கோடைவான் மழையெனத் துறுகுள நிறைய
விளந்திண் மீன்பொர வெருமைபால் சொரிவன வெதிராய். (சஅ)

ஆவ நாழிகை முன்னிலைப் படுவதற் கஞ்சிக்
காவ லாளர்பின் மறைதரத் திகழ்கணைக் காலாய்
மேவ ணிப்பணை மகளுனை வாழ்த்திவாய் விண்டாங்
கோவ லாதளி முரல்சரோ ருகமலர் வுணர்தி. (சகூ)

பராவுற் றீண்டுநர் நால்வகைப் பக்குவ நிறுக்குந்
தராசுத் தட்டெனத் தயங்கிய பரடுடைத் தையால்
விராவப் பொற்சிலம் போசைநீ நடந்தென மெல்ல
மராளப் புள்ளின மிழற்றுபு வழங்குமா காணாய். (ருO)

படியிற் றம்மைநீ தாக்குத லினித்தவிர் பாக்கு
னடியைப் பந்துபின் பற்றியாங் கவிர்குதி யம்மே
மடிதற் றுன்னேவான் மகளிர்தாழ்ந் தெனவஞ்சிக் கொம்பர்
கடிமிக் கார்மலர்க் கனத்திறு லொசிவன காணுய். (ருக)

வேத மாகமம் புத்தக வடிவினே மேய்நின்
பாத மீக்கிடந் தெனக்கிளர் புறவடிப் பாவாய்
நாதர் தீர்வினீ நனிபசப் பான்றுணர் நல்கச்
சூத மோர்ந்தபோற் றளிர்ப்பன விழிக்கணே தூண்டாய். (ருஉ)

உனேவின் ணுடிய ரிறைஞ்சுஞான் றிழையுழை யுக்க
கனேயொ ளித்துகிர் நிரைபுரை கால்விரற் கன்னீ
தனேயு யிர்ப்பித்த நீவரு தண்ணடை வசந்தன்
புனேதல் செய்தெனப் பூத்துறு பொழிலெழி னேக்காய். (ருங)

பற்ப லண்டத்து மதிதம குறையொழிப் பானின்
னற்ப தத்தின்முன் னிரைந்துதாழ்ந் தெனநகு நகத்தாய்
பொற்ப ணேக்குயில் பொலியுமிவ் விருதுவெப் போழ்து
நிற்ப நீயரு ளென்பபோற் கூவுவ நேர்தி. (ருச)

பருவின் ணுணிஞற் பஞ்சியும் வெட்டுண்டு பறந்தே
யிரிய மென்மைவாய்ந் தினிதுசேந் திலங்ககந் தாளாய்
வருண னின்னெதிர் கையுறை சொரிந்தென வாரி
தரள நந்துதுப் பலேக்கரத் திறைத்தல்கண் சாத்தாய். (ருரு)

பிடியி னத்தினேப் பயம்பினுள் வீழ்த்துபு பிடித்தீர்த்
தடியில் வன்றொடர் புனேஇச்சினந் தணிநடை யணங்கே
முடிவி லானெமை முடித்திட முடித்தியென் றுன்னேக்
கடிய கைதைகை குவிப்பபோன் முகிழ்ப்பன காணுய். (ருசு)

அரும்பொ னேச்சயங் கொண்டுதீ வாய்மடுத் தடித்துக்
கருங்கன் மீதுட ஞரிஞுவித் தொளிர்நிறக் கவுரி
விரிந்த பேரரு வயிஞுரு வருமெனல் விளக்கப்
பரந்த வப்பிடை யுப்பெழீஇக் குவவுவ பாராய். (ருஎ)

அடையிற் காரல சவியுரு தெனமயி லசித்துக்
கடைபட் டன்றெனு வமிழ்திகழ் சாயலங் கரும்பே
நடைபெற் றேகச்செவ் வழியிதென் றுரைப்பபோன் ஞாழற்
புடையிற் செவ்வழி முரன்றுலாம் பொறிவரி நோக்காய். (ருஅ)

என்று மங்கலை யினியன வளனெடுத் தியம்ப
நன்று நாடுபு நாயினே னடிமையு நயந்தாள்
குன்று முற்கடந் தேகுகான் மன்பதைக் குலத்தை
யன்று மாமுது வேனில் புக்கிறுத்ததை யன்றே. (ருகூ)

வேறு.

விருத்த வேனிலாம் வெய்ய தீத்தலை
யிருத்தி மன்னுயி ரெனுமு லோகத்தை
யுருக்க மேற்றிசைக் கொல்ல னூதுவான்
றுருத்திக் காற்றெனக் கோடை துற்றதால். (சுo)

இறுதி தங்களுக் கேய்ந்த வெல்லையு
முறுதி தாங்கினுர்க் குஞற்று நீரர்போ
லறுதி முற்றிய வடைடம ராடியிற்
குறுகி வீழ்மவை கொழுமை பின்புற. (சுக)

பற்று நீங்குபு பட்ட கோடரம்
வற்றன் மாமரன் மற்றைப் பாதவ
முற்றும் வேற்றுமை முன்னெ னுவகை
நிற்றன் மேயின நீடு ருப்பினல். (சுஉ)

அறல்வ றத்தலி னறல்பு லப்படத்
துறுமு வார்நதித் தோற்றங் கூர்வெயி
றெறமெ லிந்துபார்த் தெரிவை யோதியைப்
புறன் விரித்தனள் கிடத்தல் போன்றதே. (சுரு)

துன்று மன்னுயிர்த் தொகுதி யாக்கையி
னின்று வார்தரும் வியர்வு நீருமான்
கன்று சென்றலை கான னீருமே
யின்றி யேனை நீ ரில்லை யாண்டையும். (சுச)

கதிர வன்பெறுங் காளிந் திப்பெயர்
நதியு மந்தனுந் நடுவ னுந்தவ
விதிரொ ளித்தம மெய்க ரிந்தனர்
முதிய வேனிலின் முளிந்து போனுமால். (சுரு)

உழல்வெ யிற்பிழம் புருப்ப மாற்றலா
தழலும் வெவ்விய வழலு மட்டில்வாய்
நிழலும் வேள்வியஞ் சாலை நீழலும்
கழல்வொ ரீஇப்புகூஉக் கலந்துய்த் தன்றரோ. (சுசு)

கொடிய தாபவெங் கொதிப்பி னைப்பயந்
தொடிவி கந்ததண் ணுதக ராசியிப்
படியி னின்றுகீழ்ப் பாத லத்திடைக்
கடிது சென்றுருக் கரந்து வைகின்றே. (சுஎ)

நளிப்பி லத்துழை நணிய பாணியை
விளிப்ப ருஞ்சுடர் வெம்மை விள்கமர்
வெளிக்கு ளேகுபு மிகக்க னற்றிற்று
லொளித்துக் கொள்ளினு மூழ்வி டுங்கொலோ. (சுஅ)

வெய்ய வித்தகு வேனி லாற்றவத்
தெய்ய மெய்யுயிர் தேம்பிச் சாம்பியே
பைய வேகுறும் பரிச னங்களைத்
தைய னாயகி தயாவி னோக்கினள். (சுகூ)

இரங்கி நோக்கலு மெரியும் பாலையாப்
பரந்த பாரெலாம் பண்ணை யாயது
கரந்து வேனிறண் காரிற் சேர்த்தது
நிரந்த தானையை நீடிற் றின்பமே. (எ0)

புத்தி முத்தியும் புற்க லர்க்கருள்
சத்தி யாற்றிற்று வியக்கத் தக்கதோ
வித்தி றத்தன வெளிது செய்மவள்
பத்தி யாளர்தம் பாத தூளியே. (எக)

கோளிற் கோட்படாக் குறைந்த மாமதி
மீளுற் றுலென வேனில் வாயொரீஇ
வாளுற் றுரொடும் வழிக்கொள் கின்றவள்
வேளுக் காற்றலை விளைத்த மானினி. (எஉ)

இலகு நித்தில யான நின்றிழீஇச்
சலன மோப்புகே தாரங் காசிபற்
பலர்தொ ழும்பருப் பதஞ்சி தம்பரங்
கலவு மான்மியக் கமலை யாலவாய். (எங)

நிவப்பி னேடுநேர் நீத்த வின்னன
சிவத்த லங்களைச் செய்ய சீறடி
கவற்சி யெய்தப்போய்க் கருத்திற் பேரன்பு
முவப்பு நீடநின் றுருகிப் போற்றுபு. (எச)

பிறிம லர்ப்பதம் பெயர்த்து மென்மெலக்
கழிசி றப்புடைக் கடகத் திங்களில்
வழுவில் சுக்கிர வார வைகறை
யெழில்கொள் வெற்றியூ ரெல்லை நண்ணினுள். (எரு)

உலந்தி டாதகே ரோடும் வீதியை
வலஞ்செய் தெந்தையார் மான நேர்பணீஇ
யலங்கொ ளித்தளி யரண்க டந்துளாற்
பொலங்கொ டிக்கடிப் புனிதை புக்கனள். (எசு)

நிம்ப நீழல்வாய் நெடிது போழ்துறீஇக்
கம்ப மற்றபல் கணத்தர் பாங்கெலாம்
பம்ப வாறுசெல் பரிவு யிர்த்தபின்
வம்ப ருப்புனல் வாவி நோக்கினுள். (எஎ)

கோடை யுண்டநீர்க் குறைத பத்தனு
தாடல் வாள்விழி யருளி ஞனிறைத்
தூடு தான்படிந் துரைத்த தீர்த்தத்தைச்
சேடு மல்கிய தீர்த்த மாக்கினுள். (எஅ)

புறத்தி வீரமன் புலர்த்தி வற்கலை
சிறக்கு மாறுடீஇத் திருவெண் ணீறணீஇ
யறப்பெ ருங்கட லக்க மாமணி
விறப்ப மெய்யெலா மிலைச்சி னுளரோ. (எகூ)

அஞ்செ ழுத்தினை யன்பு வட்டெழ
நெஞ்ச ழுத்துபு நீடு காதலாற்
பஞ்சி மெல்லடிப் பாவை பைப்பயச்
செஞ்ச டைப்பிரான் றிருமு னெய்தினுள். (அ0)

புராத னத்தனிப் புற்றி லோவற
விராவு நாதனை வீழ்ந்து தாழ்ந்தெழீஇப்
பராய்வ லங்கொடு பயிற வக்கிடர்
வராது காக்கென மனத்துள் வேண்டினுள். (அக)

எண்ணி லாகம மியம்பி னுர்மகி
ழுண்மை யாவது பூசை யென்றுணர்ந்
தண்ண லாரையர்ச் சனைபு ரிந்திடப்
பெண்ணி னல்லவள் பெட்பு மிக்கனள். (அஉ)

உலப்பி னந்திதேர்ந் துதுகு றிப்பினுற்
புலத்தி னுடொனுள் பூச னைக்குரிக்
கலப்பை யென்னவுங் கதுமெ னத்தர
விலக்கர் பூதரை யாங்கு முய்த்தனன். (அங)

காம தேனினங் கற்ப கக்குல
மேம நன்னிதி யீட்டஞ் செய்யசிந்
தாம ணித்தொகை தக்க வேனைய
கோம ளத்தவுங் கொணர்ந்திட் டார்கணர். (அச)

தருவி னுற்றரப் பட்ட தார்வகை
மருவு யிர்க்கும்வார் மதும லர்க்குவால்
குருவி ளங்குபொற் கோசி கங்களென்
றிருவி னுரொர்சா ரேழை மார்சிலர். (அரு)

சுரபி நல்கிய துவைவம ணத்தகுய்
கருணை யாதிய கறிசிற் றுண்டிதே
மருவு பாளித மவுற்க மின்னசேர்
தரவைத் தாரொர்சார் தைய லார்சிலர். (அகா)

இருத யத்திடை பெண்ணிற் ருங்கருள்
வரசிந் தாமணி மகிழ்ந்து வீசிய
அாத னப்பல்வே றணிக லத்திர
ணிரைவித் தாரொர்சார் நிழன்மின் னார்சிலர். (அஎ)

சங்க வொண்ணிதி தளித்த வீர்ம்புனல்
பங்க யத்தினிற் படர்வி சைப்பொரு
ளிங்கண் வேண்டுப கரண மேனவுந்
தங்கு மாறொரு சார்வைத் தார்சிலர். (அஅ)

பவாத்தி நீந்திய பகவ னந்திசென்
றுவாத்திங் கண்முகத் துமைமு னம்மனுய்
சிவார்ச்ச னைக்குரித் திரவி யம்மெலாந்
தவாத்தி றத்திவட் சார்ந்த வென்றனன். (அகூ)

என்ற வார்த்தைகேட் டிமையப் பைம்பிடி
கன்று நென்னலீன் கறவை நேர்ந்தெனப்
பொன்று ருப்பழம் புற்று காதனே
ரொன்றிப் பூசனை யுளுற்ற லுற்றனள். (கூ0)

திரும டந்தையுஞ் செய்யுட் செல்வியுந்
தரும வாரிதி சபரி யைப்பொரு
ளரும ருந்தெனக் கான வம்மைதன்
னிரும ருங்குகின் றெடுத்து நீட்டிய. (௬௧)

கந்த தைலம்வண் கனியின் சாறுதேன்
சந்த மைந்தமு தானெய் பாறயிர்
நிந்தை தீரிள நீர்ப னிப்புன
லந்தி லின்னன வடைவி னாட்டியே. (௬௨)

எல்லிட் டோங்கிய விலிங்க மூர்த்திக்கு
மெல்லொற் றுடையை மெல்லச் சாத்துபு
சொல்லற் கொப்பருந் தூய பட்டரை
புல்லச் சூழ்த்துமுப் புரிப்பொன் னூல்புனை இ (௬௩)

முண்ட நெற்றிமேன் முந்த ணிந்துகான்
மண்ட மேனியிற் களப மட்டியா
விண்டை யாதியா விணைத்த மாலைகள்
கொண்டு முற்றவுங் கோடித் திட்டரோ. (௬௪)

விலைவ ரம்பிலா வியன்ம ணித்தொகை
நிலைபெ றுத்திய வெயின்மின் னீழல்செய்
பலதி றத்தவா பரணம் வேய்ந்திறை
யிலகொ ளிப்பிழம் பெனறெ ரித்தென. (௬௫)

அறுவ கைச்சுவை யமன்ற சொன் றிகண்
மறுவி னீங்கிய வபூப வர்க்கந்தேந்
துறுமு பானியஞ் சுகந்தப் பாகடை
குறுக வைத்தறல் கோட்டி யார்வித்து. (௬௬)

பரிம ளத்ததூ பங்கொ டுத்தக
லெரிசெ ழுஞ்சுட ரெதிர்வ யக்குபு
கரிசி கந்தறக் கடிக மழ்ந்தொளி
ரரிய காஞ்சனத் தலரி னர்ச்சியா. (௬௭)

அளவி றந்துகண் ணருவி பாய்தரப்
புளக மேனியிற் போர்ப்ப விம்முறக்
களமு டிக்குமீக் கரங்க ளேறநெஞ்
சிளகி யீசனை யேத்தன் மேயினள். (௬௮)

வேறு.

பூவகந்தேர் வாசிமறை பூவுலவு கோவலவன்
ஞுவகன்ற மேருவரை சாபநெடு மால்கணையாப்
பாவகத்தாற் கொண்டெம் பரனீ புரஞ்செற்ற
சேகவத்தைக் கூறிற் சிரிப்பாய் முடியுமே. (சுகூ)

விட்புலவர் வேந்தன் விரிஞ்சியரி யென்றின்னே
ருட்புலனு வுய்த்தறிய வொண்ணு தொளித்திருந்து
நட்புலவார் நாடவெதிர் நாதவுனக் கோர்சிறிதுங்
கட்புலனு காமதனைக் காய்ந்தனைநீ யென்பதென்னே. (க00)

முடிக்கமலந் தாங்கு முழுமுதான் முன்னீ
குடிக்கமலஞ் சார்த்த குலமாணி தன்னை
நொடிக்கமலங் காவெழுந்த நோன்கூற்றன் சென்னிக்
கடிக்கமலஞ் சூட்டிற் றலதுவயங் கொண்டதுண்டே. (க0க)

கரும்பொன்று கார்முகத்துக் காமனெடு சாமற்
றரும்பொன்றுஞ் சாகத் தலைவனய னுதி
யரும்பொன்று துன்பெய்த வன்னரிறு மாப்பைத்
துரும்பொன்று தீர்த்ததலாற் சூழ்ந்தெவனீ செய்தனையே. (க0உ)

அலங்கரிக்கும் வாண்மணிப்பை யாடரப்பூண் மார்பா
சலந்தரற்செற் றண்டர் தமைப்புரந்தா யென்ப
பலம்படைத்த வன்னுனைப் பார்த்த வளவி
னிலங்கிளைத்து நின்றதன்றி நீபுரிந்த தொன்றின்றே. (க0௩)

என்றிறைவி யேத்திசைப்ப வீசனிலிங் கத்தி
னின்று வெளிப்பட்டு நிகழ்த்துவா னேரிழையா
யொன்றுமன னஞ்சே லுரைத்தவா நீநோற்ற
பின்றை யுனைப்பாகம் பிரியாமை மெய்வைத்தும். (க0ச)

என்னு வுரைஇக்குறிபுக் கெய்திக் கரத்தனுமம்
பொன்னுக வில்லாற் புறவிடையே கொண்டொழிந்து
தென்னுர் செழுந்துணைக்கைச் செந்தாமரை முகிழ்ப்ப
மின்னு ரிடைநுடங்க மென்சிற் றடிகன்ற. (க0ரு)

ஆலயந்தீர்த் தாய்மயிலி னம்பிகைதண் ணிம்பநிழற்
பாலணைந்து பைந்தாட் பதுமா தனத்திருந்து
கோலமொன்று முற்றுறுப்புங் கோடாது நேர்நிறீஇச்
சேலடர்ந்து வான்றிருண்டு சேர்ந்ததடங் கண்ணிமையா. (க0சு)

செய்ய கரவிரலிற் சின்முத் திரைசேர்த்திப்
பொய்யகன்ற வாநந்த போதவுரு வாய்நிறைந்த
மெய்யன் வியாபகத்துள் வேறறுமா தானடங்கித்
தெய்ய வரியதவஞ் செய்தனளா லோரயனம். (கoஎ)

அம்மையொடு பெற்றபிரி வாற்றுமை பற்றியோ
கொம்மைமுலை யன்னுள் குயின்றவிர தங்குறித்தோ
வெம்மையெலா முய்விக்க வெண்ணியோ யாமறியோ
மும்மைவிழி மூர்த்தியவண் முன்னின்று னேறேறி. (கoஅ)

முன்னின்ற நாயகனைக் காண்டலுங்கண் முத்திறைப்பப்
பொன்னின்ற மேனி புளகரும்ப வுண்மலர
வன்னின்ற கூந்த லவிழ்ந்து விரையுயிர்ப்ப
வன்னின்ற கொங்கை மலைவல்லி தாழ்ந்தெழுந்தாள். (கoக)

தாழ்ந்தெழுந்த தேவி தனைவாண் முகநோக்கிச்
சூழ்ந்துணரா நின்றவிரு சுட்டுணர்வுக் கெட்டாமே
யாழ்ந்தகன்ற நுண்ணியவெம் மையன்மணி வாக்கானீ
வீழ்ந்தவர மென்னை விளம்புதியால் வல்லையென. (கக0)

கேட்ட கவுரி கிளர்ச்சிததும் புள்ளத்தா
ளீட்டமிளிர் செஞ்சடையா யெற்குநீ காட்சிதரு
கோட்டமிலித் தைவெள்ளி யீங்குன் குறிதொழுவோர்
வேட்டவெலா மேவியிட வேண்டு மதாஅன்று. (கக்க)

இக்கடிகொண் மாநகர்க்கியா னெய்து கடகமதிச்
சுக்கிரவா ரத்திடைநின் சோதி மயவிலிங்க
மிக்கபெருங் காதல் விரவ வழிபடுவோர்
தக்கவகை நாற்பயனுந் தாம்பெறுதல் வேண்டுமால். (ககஉ)

ஊனிதய நெக்க வுழுவலன்ப ரெண்ணிலர்க்குக்
கானிமிரும் பூந்தாட் கலப்பருளா நின்றவள்ளால்
யானினது பாகம் பிரியாமை யெஞ்ஞான்று
மேனியுட னென்றியுறல் வேண்டு மெனவிரந்தாள். (ககங)

ஏகன் கவுமாரி யேற்றவெலா மீத்துரைப்பான்
பூகம் பொருகளத்துப் பூவாய் வடிவுகொடு
பாகம் பிரியா ளெனும்பேர் பரித்திங்க
ணுகம் பிலம்பார் நயந்த முழுதருளி. (ககச)

மன்னிப் பொலிதியென வாய்மலர்ந்தெம் மாதரசை
மின்னிற் றிகழும் வியன்மேனி வாமத்துப்
பின்னிப் புணர்வித்துப் பேணிநந்தி யாதியர்க
டுன்னிப் புடைசூழத் தொல்கைலை சென்றணைந்தான். (ககடு)

இப்பா லுருவோ டிறையிசைத்த பேர்தாங்கித்
துப்பாய வூட்டியெமைத் துன்பொழிக்கு மம்பிகையாங்
கெப்பா லவருநசைஇ யெண்பொருளை யெண்பொருளாத்
தப்பாது நல்கித் தழைக்கின்றாள் சந்ததமும். (ககசா)

பெருமாட்டி பாகம் பிரியாமை காம
வருமாட்டி பாற்பெற்ற வொண்சரிதம் விண்டாந்
திருமாட்டி காவிருப்பன் றேவனைநீ ரும்பூ
வருமாட்டி யர்ச்சித்து வாழ்வடுத்த வாறுரைத்தும். (ககஎ)

ஆகத்திருவிருத்தம். ருஉஉ.

பார்வதிபாகம்பிரியாவரம்பெற்றபடலம் முற்றிற்று.

---

# திருமால் வழிபடு படலம்.

காசிபக் குரிசிலைக் காதலிற் குலவினா
ளேசிலா வதிதிரா மேய்ந்தமா தீன்றவான்
றேசினர் தம்மொடுந் திதிமகார் பண்டொர்நாண்
மூசிநீள் வெம்பகை மூண்டமர் செய்வுழி. (க)

தீயவல் லசுரரைத் தேவர்வெந் நிட்டனர்
தாயதண் பாற்கடற் சூழலிற் சுட்டராப்
பாயலிற் பள்ளிகொள் பங்கயச் செங்கணன்
மாயவன் றன்வயின் வல்விரைந் தண்மினர். (உ)

கடைக்கணிப் பளவினிற் கரையில்பல் செல்வமும்
படைப்பவள் கொண்கனைப் பரிதிசேர் பாணியாய்
தடைப்படா துலகெலாந் தாங்கியோங் கெம்பிரா
னடைக்கலம் புக்குளே மஞ்சலென் றருள்கவே. (ங)

என்றசொற் செவியினூ டேற்றுணர்ந் தாங்கெழீஇப்
பொன்றயங் கருவிலைப் பூந்துகில் வேய்ந்தகோ
னென்றுநீர் வெருவன்மின் னேதுநும் வரவென
வன்றினா ரார்த்ததுன் பமரர்கூ றிடுதலும். (ச)

கருடன்வண் பியன்மிசைக் கண்ணனு ரோகணித்
தொருவலா தியவுளா ருடன்வரத் தானவர்
மருவுசெங் களனகன் வந்துவிற் கால்வளைஇ
யுருமினே றென்னநா ணொலிபடுத் தானரோ. (ரு)

அணிவகுத் தேற்றுநின் றசுரரா யினரெலாங்
கணிதமில் கணைவளைக் கரன்மிசைத் தாவினர்
மணிநெடுங் குன்றின்மேல் வாரிதம் பலசூழீஇத்
தணிவறப் பெருமழைத் தாரைகான் றலென. (சு)

ஊறுபா டொன்றுமின் றுவணவூர் திப்பிரான்
மாறுபா டுற்றதா னவரைநீ மாய்த்தியென்
றீறிலா வாணைதந் தெஃகிலங் காழியாம்
வீறுசேர் திம்படை விட்டனன் விடுதலும். (எ)

மண்டுவெஞ் சிகையழல் வாயுமிழ்ந் ததுவரக்
கண்டுகோ ரவுணமாக் கடலுடைந் திரியல்போய்த்
தண்டரும் பிருகுமா தவனிலைச் சாலையுட்
கெண்டையுண் கண்ணினள் கியாதியைக் குறுகுபு. (அ)

பஞ்சரக் கிளிமொழிப் பஞ்சரக் கேரடிக்
கஞ்சமொத் தவிர்முகக் கற்பினுக் கரசியே
தஞ்சம்வே றிலைநினைச் சரணடைந் தாமென
வஞ்சலென் றன்னமின் னபயநல் கினளரோ. (கூ)

தனுமகார் யாரையுந் தன்வயிற் றுன்னவைத்
தினிதிருந் தனளனு ணிறையெனும் மெரிசுட
முனிவொரீஇ மீண்டுகூ ராழிதா மோதரன்
றனதுழிச் சாரவத் தண்டுழாய் மாயவன். (க0)

திருகுவெஞ் சினமிகச் சென்றனன் றுபதப்
பிருகுவாச் சிரமமேப் பிள்ளையைப் பெற்றசீர்
மருவெழிற் கியாதியின் வதனநேர் நோக்கினன்
பொருவருஞ் சில்லசொற் புகலுவா னீதியால். (கக)

வேறு.

ஆன்ற செய்தி யயர்த லயர்வித்த
லேன்று டன்பட லாய விவற்றினைச்
சான்ற வேதந் தகுபுண் ணியமெனுந்
தேன்ற வாது செறிநறும் பூங்குழால். (கஉ)

இழிந்த கன்ம மிழைத்த விழைப்பித்தன்
மொழிந்த தற்க னு மோதமிம் மூன்றையு
மழிந்தி டாமறை பாவமென் ருர்க்குமாற்
பொழிந்த தண்கதிர்ப் பான்மதி போனுதால். (கங)

உயர்ந்த நல்வினை யாவ துயிர்களுக்
கியன்ற வாறித மேய்ப்ப தவற்றினைத்
தியங்கு மாறகி தஞ்செய தீவினை
வயங்கு வில்லுறழ் வார்புரு வக்கொடீ. (கச)

ஒருவ ஞெலோர் குடும்ப முறுகண்மன்
மருவு மேலவன் றன்னுயிர் வவ்வுதல்
பொருவி லாவற மென்று புகலுநூல்
மருணெ டுங்கண் பொரவலை வார்குழாய். (கரு)

குடும்ப மொன்றிற் கொடுந்துய ரோர்குலங்
கடும்பி னேடுற்றக் காலக் குடும்பத்தை
யொடுங்கு மாறட றன்மமென் றேதுப
விடுங்க ணைக்கயில் வேள்கொள் கவுள்வதூஉ. (கசு)

ஓர்கு லத்தினே ரூரவ ரூங்களுர்
சார்கு வாரெனிற் சாற்றிய வக்குல
வேர்கு மைந்திட வீப்பது மிக்கறஞ்
சீர்கு லாங்குமிழ் செற்றெளிர் நாசியாய். (கஎ)

மாடொன் றேர்நகர் வைகிய மாக்களா
ளுடொன் றுக்கிடர் நண்ணினவ் வூர்முற்றுங்
கேடொன் றத்தெறு கிற்பது புண்ணிய
மேடொன் றெண்முருக் கெள்ளு மிதழியே. (கஅ)

ஆத லாற்பற்ப லண்டர்க் கயர்வயர்
யாது தானரைக் கோற லினிதரோ
நீதி நீத்தவந் நீசர்க் கிடங்கொடேல்
கோத கன்ற குமுதச்செவ் வாயினுய். (ககூ)

என்ன வின்ன வியம்பலு மென்னடை
யன்ன மன்னவன் ளுளிது கூறுவாள்
பொன்ன ளாய புணர்முலைப் பூமகண்
மன்னு மார்பத்து மாலவ கேண்மியா. (உ0)

ஏதி லார்க்கிஃ திசையு முலகினை
யாதி மத்திய மந்தஞ்செய் மூவருட்
டீதி லாவொரு தேவெனு நீபக்க
பாதி யாதல் பரக்கழி விற்றரோ. (உக)

பொருவி னேடு புரைதபு புண்ணியர்
வெருவ ரத்தரு வெவ்வினை யாளரென்
றிருதி றத்தவர் மாட்டு மிரங்குபு
கருணை தூண்டல் கடவுட் கடனன்றே. (உஉ)

ஆக்கு வானதி காரமயன் பெறச்
சீக்கு மாறு சிவன்கொள வாருயிர்
காக்கு மாட்சி கடைப்பிடித் திட்டநீ
வீக்கு கிற்ப விழைதன் முறைமையோ. (உந)

கொத்தி யன்ற குணத்திர யத்தினுட்
சத்து வத்தைத் தரித்துளை யென்றுநின்
பொத்த னுக்கு புராணம் புகல்வது
மித்தை யோவன்றி வெற்றுப சாரமோ. (உச)

என்று ரைத்த வினியன கூற்றினை
நன்று தன்செவி சார்த்தி நவில்கின்று
னென்று தீஞ்சுவைப் பாற்கட லூடின்பந்
துன்று யோகத் துயில்பயில் புங்கவன். (உரு)

உம்ப ராரி லுருத்திர னந்தணன்
வெம்ப கைப்புலன் வென்றடு வேந்தன்யான்
கொம்பர் வாணி கொழுநன் வணிகனும்
பம்ப முத்தம் பதித்தன வாணகாய். (உசு)

சிட்ட ரைப்பரி பாலனஞ் செய்வது
துட்டர் தம்மைத் துமித்துக் குலத்தொடு
மட்ட லென்றிவ் வரசர்க் குரித்தொழின்
மட்ட லர்த்தலை வார்வுறழ் தேமொழீ. (உஎ)

மனுசர் மாதவர் வானவ ராமிவர்க்
கனிசம் வன்றுய ராற்றி யிடுங்கொடுந்
தனுச ரைத்தெற றக்கன் றெனக்கெழிற்
புனித பூகம் புரையு மிடற்றினய். (உஅ)

எனவி ளம்பலு மேந்திழை யோதுவாள்
வனமி லைச்சிய மார்பபல் லூழிபண்
டினைவு சூரனிற் பண்ணவ ரெய்துழித்
துனைய வன்றற் றுலைத்திலை யென்கொலோ. (உகூ)

கயமு கத்துக் கடிய னலியமுன்
னியவு ளார்குழு வெண்ணவொன் றுதரா
ளயர்வு ழப்பவு மாழிக் கரத்துநீ
மயர்வு மல்க மடித்திலை யென்கொலோ. (௩0)

திரிபு ரத்திடைச் செற்றிய தீயரால்
விரியு நீர்நிலம் விண்முதல் யாவையும்
பெரிது மாழாந்து பேதுற்ற வற்றைஞான்
றெரிசி னத்தி னிறுத்திலை யென்கொலோ. (௩க)

என்ற வார்த்தை வினவின னேற்குமா
மன்ற வேமறு மாற்றம் வகுப்பனுன்
மின்ற யங்கு வியன்மணி சீர்மறுப்
பொன்ற வாது பொலியு முரத்தினன். (௩உ)

அறைந்த மூவகை யாரும் பிராற்பராய்
நிறைந்த பல்வர நேர்ந்தன ராகலான்
மறைந்து நின்றெனும் மாய்ப்பவல் லேனலேன்
குறைந்தி டக்கழை கோட்டுமென் றேளியே. (௩௩)

அன்ன ரண்டர்க் களப்பருங் காலமிக்
கின்ன லேய்ப்பவு மீசன்வா ளாவுற்ற
தென்னை யென்னி னியம்புவல் கேளிக
நன்னர் யாழ்நனி நாண்கொளு முன்கையாய். (௩௪)

என்னை யாதிய வின்னுயிர் வர்க்கத்திற்
கன்னை யப்ப னருந்துணை நாயக
னென்ன நின்றரு ளீயும் பசுபதி
தன்னை யெள்ளுபு தக்கன் மகஞ்செய. (௩௫)

விழைவி னங்கண் விபுதரெல் லேமும்போய்ப்
பழைய வல்வினை பாற்ற மதிமருண்
டுழையி ருந்தவி யுண்ணப்புக் கேமையப்
பிழைத புத்தனன் பிஞ்ஞகன் வீரனல். (௩௬)

அட்ட மூர்த்தி தனையா மவமதித்
திட்ட பாவத்தி னெச்சப் பயன்றுய்த்துச்
சிட்ட ராதலைச் சிந்தித்து வைகினன்
மட்டில் பல்பகல் வன்கணன் மானவே. (௩எ)

அவிச்சை யாற்பரம் யாமென் றுரோவழி
நவிற்றி னேமையந் நன்றியில் வன்பவந்
தவிர்க்கு மாறு கருதியுஞ் சாலநாட்
கவிழ்த்த வுள்ளக் கருணையன் போன்றனன். (௩அ)

மங்கை பங்கன் வயின்வரம் பெற்றவர்
தங்க ளாருயிர் வௌவுந் தகைமையவ்
வங்க ணற்கு மரிதரி தென்பராற்
பங்க மோப்பி முழுதுணர் பான்மையர். (௩௯)

தேவ ரேந்துயர் தீர்தரு செவ்வியிற்
றூவ ருஞ்சிவன் சத்தியைச் சேயென
வேவி யெண்டகு சூரபன் மாவின
தாவி கோடலின் றங்க னடக்கினன். (௪0)

சரணுற் றேமுயத் தன்னரு ளாகியே
பிரண வத்துழைத் தோன்றிய பிள்ளைக்கு
முரணும் வேழ முகத்தனை யூர்தியின்
விரவு வித்து விமல னெடுக்கினன். (௪௧)

மடிய முப்புர வாணரை யெம்பிரான்
பொடிசெய்ஞ் ஞான்றுந்தன் பூங்கழல் போற்றிய
முடிகொண் மூவருய்ந் தாரெனி னன்னவ
னடியர் மேன்மையை யார்சொல வல்லுநர். (௪௨)

மஞ்சி னேடுறழ் வண்ணனிஃ தோதலும்
பஞ்சி மெல்லடிப் பாவை பகருவாள்
வெஞ்சி லைக்கர வீரர்க் கமரகத்
தஞ்சி யோடுநர்க் கோற லறங்கொலோ. (௪௩)

தெரிந்து செவ்வன் புகறியென் றூளுக்குக்
கரிந்த வுள்ளத்துக் கைதவக் கள்வர்யாண்
டிரிந்தொ ளிப்பினு மீர்த்தட லாமென
விரிந்த சீர்த்தியன் விண்டுவின் டானரோ. (௪௪)

நெய்வி ழைந்தொளிர் நேமிசொற் கேட்டவ
ளுய்வி யென்றிங் கபயம்புக் கோர்தமை
மெய்வி ராமுயிர் வீட வரினும்யான்
கைவி டேனெனக் கட்டுரைத் தாளன்றே. (சரு)

மாது ரைக்கு மறுத்துரை யின்மையா
னூது கொல்ல லுலேச்சிலை போல்விழி
மீத ழற்கொழுந் தோங்கி வெளிப்பட
வேத னத்தன் வெகுண்டன னென்பவே. (சசு)

திருகு சிந்தையன் செங்கைச் சுரிகையாற்
பிருகு தேவி கியாதிப் பெயரின
ளுருவு நேர்வகிர்ந் தாவி யொழித்தனன்
குருதி யெங்கணுங் கொப்புளித் தோட்டர. (சஎ)

பின்ன ராங்கவ டன்வயிற் பேணிய
துன்ன லாரை யொருங்கு தொலேத்தன
னன்ன காலே யருந்தவன் போந்துதன்
பன்னி மேனியைப் பார்த்துப் பொருமுபு. (சஅ)

கண்ணின் வாரி கலுழியின் வார்ந்துக
வுண்ணி லாய வுணர்வு புணர்வற
மண்ணில் வீழ்வுற்று வாய்புலர்ந் தூங்குயிர்த்
தெண்ணி வாழ்க்கைத் துணையை யிரங்குவான். (சகூ)

வேறு.

என்னுரையை யென்றுனு மெட்டுணையு மெள்ளாது
சொன்னபரி செல்லாந் துனேவின் மகிழ்ந்தியற்றித்
தன்னமுகஞ் சாம்பியிடக் கண்டாற் றவப்புலர்வோ
யின்னுயிரே மின்னனேயா யான்றமிப்பச் சென்றியென்னே. (ருo)

நோய்க்கு விலக்காகி நூலின் விதித்தனவாய்
வாய்க்கு முடற்கு மனக்கு மினியவுண
வாக்கி யெனேவிருந்தோ டார்வித்த விற்குரிய
பாக்கியமே நின்னிழந்த பாவியெங்ங னுய்வேனே. (ருக)

கற்றுவைப் போலக் கசிந்துருகு பேரன்பு
வற்றுமே யோர்படித்தாய் வைகலுமென் மாட்டுடைய
முற்றுத கோங்க முகைநேர் முலேயாய்நீ
யிற்று யென்றோர்ந்து மிருந்தேன்கன் னெஞ்சேனே. (ருஉ)

பன்னவகை யானீ பரப்பியபூஞ் சேக்கையில்யான்
றுன்னுதலும் பாதத் துணைவருடிப் பின்னுறங்கி
முன்னெழூஉம் பேதாய் முடிந்தா யினியந்தோ
வென்ன விருகண்ணு மிராத்துயில மாட்டாவே. (ருங)

நோன்புக் கியைவ குறிப்பா னுனித்தமைத்திட்
டூன்புக்க மெய்ந்நிழலி னேவா தெனைத்தொடர்ந்து
நான்புக்க மூன்று நிலைநிறுத்த நல்லாய்நீ
வான்புக்கா யார்துணையா மாநிலத்து வாழ்வேனே. (ருச)

அன்னை பிதாவினுட னாசாரி யன்றெய்வம்
பின்னையிவண் வேறுளரென் றுள்ளத்துப் பேணுமை
யென்னையே யெல்லாமாக் கொண்டு தொழுதெழுவா
யுன்னை யிகந்தேற் கொருபகல்பத் தூழிமைத்தே. (ருரு)

நாணமட மச்சம் பயிர்ப்பென்னு நாற்குணமுங்
கோணகனு மேனைக் குணமு நிறையுமொன்றிக்
காணவுருத் தாங்குக் காட்சி தருபுனிதாய்
சேணமின்னார்ப் பெண்மை தெரிப்பதற்கோ சென்றாயே. (ருகூ)

ஆயாதார் தேறற் கருமருங்கன் றோர்குறையு
மேயாது சான்ற வெழிலார் பதுமைக்குத்
தாயாய கட்டழகி நின்போற் றமியேனு
மாயா வரையெனது வன்றுயர மாறாதே. (ருஎ)

வன்பு தனத்தின்றி மனத்தில்லா மாதரசி
யன்புகெழீஇ யான்செ யறத்திற்குச் சாதனமா
யின்புதவி நின்றுளநீ யின்றென்னைக் கைவிட்டுத்
துன்புமிடைத் திம்பர்த் துறந்தா யிதுதகவோ. (ருஅ)

கண்ணுக் கணிகலமே கற்புக் கணிகலமே
பெண்ணுக் கணிகலமே பெட்புக் கணிகலமே
மண்ணுக் கணிகலமே மாமைக் கணிகலமே
விண்ணுக் கணிகலமாய் மேவினையென் றீவினையால். (ருகூ)

என்றிரங்கி மெல்ல வொருவா றிடர்க்கடலு
ணின்றெழுந்து தேர்ந்தந் நிகழ்ச்சி முழுதுளத்தி
னன்றுணர்ந்தான் ஞாங்கர் நடுங்கிமா ழாந்துவெரூஉம்
பொன்றயங்கு மார்பானை நோக்கிப் புகல்கின்றான். (சுo)

அச்சத்தாற் காவென் றடைக்கலம்புக் காரைவயின்
வைச்சுப் புரந்த வளர்கருணைப் பைம்பிடியை
நச்சித் தகாதனவுந் தக்கனவு நாடாதென்
னிச்சைப் படியே யியங்கியபெண் ணாமுதை. (சுக)

நீதி சிறிது நினையாய் புவனங்கட்
காதி நடுவீறில் வாக்கு மமலசிவ
சோதி யடியேன் றுணையென்று சூழ்கலா
யேதிகொடீர்ந் தாயுனையன் றியார்மாலோ யீதிழைப்பார். (சுஉ)

மைமாறு வார்கூந்தன் மாமதிநேர் வாண்முகத்து
வைமாறு வேற்கண் மலர்ச்சேக்கைச் செல்விபைப்பெற
றைமாறுய்க் கென்பன்னி யன்றளித்த நன்றிக்குக்
கைமாறுப் போலுமவ ளாவி கவர்ந்தனைநீ. (சுங)

செம்பொருள வாகிகமச் சென்னியுஞ்சி வாகமமுஞ்
சம்புவே யார்க்குந் தலைவனெனல் மெய்யாயிற்
பம்பெழிலி வண்ணத்தாய் பத்துப் பவமெய்தி
யிம்ப ருழறியெனு விட்டா னெறுழ்ச்சாபம். (சுச)

ஊங்கமுங்க வைததற்பி னேங்குகத நீங்கியரன்
றேங்கிளர்ந்த பூங்கழலே சேர்ந்துளனே லென்பன்னி
யீங்குணர்ந்து முன்வருக வென்னவவ டுஞ்சிவிழித்
தாங்கெழுந்தா டாபதனு மாரஞரி னின்றெழுந்தான். (சுரு)

அல்லாடு கண்ட னடியார் குறிப்பளவின்
மல்லார் தசைநெய்த்தோர் வார்நரம்பென் றிம்முதல
வில்லாத வென்பு மினிதரவி யெய்துமெனி
னெல்லா நிறைந்தவுட லீதுயிர்த்த தற்புதமோ. (சுசு)

மாதவன்வாய்ச் சாபமரீஇ மாதவன்கைச் சாபமொரீஇ
யாதவ னேராழி நழுவ வடியற்ற
பாதவம்போல் வீழ்ந்து பதைத்துப் புரண்டழூஉ
வீதவமா காதினியா னென்செய்கென வுய்த்தோர்ந்து. (சுஎ)

காசியனீர்க் காசினியிற் காசிமுதற் காசினகர்
மூசியவண் வாழிலிங்க மூர்த்தியெலாம் போற்றல்செயாத்
தேசிகவாத் தென்பாலிற் செல்வானுக் காகூழான்
மாசிரியுஞ் சீர்வெற்றி மாபுரநேர் தோன்றிற்றே. (சுஅ)

தென்னகரந் தோறுமவி தெவ்வு சுரர்செறிவாற்
பொன்னகரம் வீழ்தருமப் பொற்பதியைத் துன்பனைத்தும்
பின்னகர வின்பம் பெருக்கெடுத்து முன்னீர்ப்பத்
தன்னகரஞ் சேகரத்தின் சார்முகிழ்த்துச் சார்ந்தனனால். (சுசு)

தேரோடு வீதியினைச் செவ்வே சுலாய்ப்படர்ந்து
காரோடு பைம்பொனொப்பக் காண்பார்க் கருள்பரம
னூரோடு வெற்பரைய னன்று வளர்த்தவுமைப்
பேரோடு வன்றேற்றம் பெற்றதிருக் கோயில்புகா. (எ0)

தூய நறுந்தண் சுவையபுனல் சூழ்கிடப்ப
வாய நடுவெட்பா சடைமிடைவுற் றுங்காங்குச்
சேய கமலந் திகழ்தலாற் றுன்பள்ளி
மேய கடலின் மிளிருந் தடங்காணூஉ. (எக)

உள்ளும் புறம்பு மொருவா வழுக்கினொடு
தள்ளுந் தகையவலாத் தாபந் தணந்தொழியப்
புள்ளும் பொறிச்சுரும்பும் பூமென் பெடைதழீஇ
நள்ளுஞ் சிறப்பிற்றந் நற்றீர்த்தந் தோய்ந்தெழுந்தான். (எஉ)

ஆயுத்த மோத்தமப்பட் டாடை யிரண்டுடீஇ
மீயுச்சி முன்னு விதித்தவற்றில் வெண்ணீறுஞ்
சாயுச்சி யாநந்த சாதன மாஞ் சாதனமுந்
தோயுற்ற கோலத்தான் றாயவெழுத் தஞ்சோதி. (எங)

மெய்வாய்கண் மூக்குச் செவியென்னும் வெய்யபொறி
யைவாய பாந்த ளவாயபுலம் போக்கடக்கிச்
சைவாக்கி ரேசரமால் பையவே தம்பாதி,
யுய்வா னடந்து விடைவிடைபெற் றுள்ளணைந்தான். (எச)

மன்னிதிகா சத்தையுயர் மாட்டுவரை மாட்டுவரை
நன்னிதிநால் வாயானை நாப்பணிள வல்லிவல்லிக்
கன்னிதினை தோளானைக் கால்வணங்கி யெம்பெருமான்
சன்னிதியி லெட்டுறுப்பான் மூன்றுமுறை தாழ்ந்தேர்ந்தான். ()

பாகம் பிரியா டிருமுன்னும் பஃறரமுட்
டாகந் தவிரத் தரைமேற் பணீஇத்தளியை
வேகங் கெழுமாது மெல்லவெழு கால்வலஞ்சூழ்ந்
தேகன் பழம்புற் றிடங்கொண்ட வீசனெதிர். (எசு)

மீண்டு மணுகி வியன்பூ சனையுளுற்ற
வேண்டு மெனமனத்து மீதூர்ந்த வேட்கையினு
ணுண்டு கலப்பை யனைத்துந் துறுவித்து
நீண்டுளசித் தாந்த நெறியுளியஃ தாற்றுகிற்பான். (எஎ)

நாகவுல கத்த நளிமண் ணுலகத்த
மாகவுல கத்த வுபகரண மந்திரத்தாற்
பாகமுறத் தூய்மை படுத்துமா யாமயத்தன்
றேகமதைச் சுத்த சிவமெய்யாப் பாவித்து. (எஅ)

கந்த மலிதயிலக் காப்பிலங்க மூர்த்திக்கு
முந்த வினிதாட்டிப் பின்னர் முனியாவின்
வந்தனவைந் தத்தொகைய வானமுதந் தேனிளநீர்
சந்தம்விரைத் தண்கமல மின்னவபி டேகியூஉ. (எகூ)

மெல்லியன வொற்றுடை கொண்டுதிரு மேனிமிசைப்
புல்லியதட் பத்தைப் புலர்த்தியினைத் தென்னவிலை
சொல்லியவொண் ணுநுழைநுண் பட்டுத் துகில்சாத்தி
நல்லிய னுற்றத்து நளிர்சாந்து மட்டியா. (அ0)

சாம்பூ நதத்திற் சமைந்த வுபவீதம்
வாம்பூ ரணகிரணக் கற்றைமணி மோலி
தாம்பூல நேருருப்பூண் சால்பட்ட மேனகலன்
றேம்பூவா னுய தெரியல்வகை சீர்ப்பவணிஇ. (அக)

திகந்த பரியந்தஞ் சென்று கமழுஞ்
சுகந்த பரிமளத்த தூபத்தி னேடொப்
பிகந்த பரிமிதமா யீண்டுசுடர்த் தீப
முகந்த பரிவின்மனு வோதியெதிர் கோட்டி. (அஉ)

நெய்தவழ்ந்து வாரப் பசும்பொன் னிறப்பருப்புப்
பெய்தமைந்த வன்னம் பிணர்தீ ரிலிகுசச்சா
றெய்தநன்று வாக்கி யியன்றபுளிஞ் சொன்றி
வெய்தகன்ற வக்கார மிக்கார்த்த பாலடிசில். (அங)

உந்தியவிர்ங் கூதி ருழைத்தோன் றுவாமதியின்
சந்திரிகை போலுந் தவளந் தழீஇயததி
நந்திவிர வோதனமற் றேனை நலத்தபதம்
வந்திவர்குய் வாசக் கருனை துவைவறையல். (அச)

மோதகமா டாபூப மொய்சுவையி லட்கெங்கண்
மேதகைய வப்பமுதிர் வெந்தை யதிரசத்தோ
டோதவரு வேறுபல்சிற் றாண்டிய பானகமுப்
பேதமுறு தீங்கனிமுற் பெட்கும் பலவர்க்கம். (அரு)

பாடலமென் போது பயின்ற நறுந்தண்ணீர்
பீடணவு பூகப் பெரும்பவளச் செங்குலைப்பாக்
கீடரிய பைந்திரைய லின்முகவா சம்முதல
வாடகம ணித்தட்டி லார்வித்து நேரிருவி. (அசு)

நாத மணிகறக்கி நன்மரபின் மந்திரித்துச்
சீத மலியுந் தெளிபுனறெ ளிஇச்சுழற்றி
யாதரவு சான்றிவ் வனைத்தையுமெம் மம்மையப்ப
நீதயையா னுண்டருள்க வென்று நிவேதித்து. (அஎ)

அப்பான் மகாதீப மன்றியுநா னாவிதத்த
துப்பார் சுவாலைச் சுடர்கள் சுடர்வித்துத்
தப்பா துபசார சோடசமுந் தானியற்றி
முப்பாழ் துமிக்குங் குறிப்புணர்த்து மூன்றுதளம். (அஅ)

கொண்டுதிக ழாநின்ற கூவிளந றுந்தளிரான்
மண்டுதிருப் பேர்சொற்றர்ச் சித்து மறுவலுங்கற்
கண்டுபடு பாயசமுற் பண்டங் கனிந்தருத்தி
யெண்டகுகற் பூர மிலக்கி முறையிடுவான். (அகூ)

தேவாதி தேவ திருவெற்றி யூரிலெந்தாய்
மேவா ரெயிலடநீ வெஃகியஞான் றுன்கரத்து
ளேவாகப் பெற்றார்வே றியாரென் றிறுமாப்பே
னாவா பவக்கடல்வீழ்ந் தாழ்ச்சிமுறை யோமுறையோ. (கூ0)

சிந்தோ லிடுஞ்சீர்த் திருவெற்றி யூரிலெந்தாய்
முந்தோர் விழிதொட்டு முண்டகமா நின்கழற்கீழ்த்
தந்தோ வியத்தெழுது சக்கரம்வாய்த் தேமாப்பே
னந்தோ பவக்கடல்வீழ்ந் தாழ்ச்சிமுறை யோமுறையோ. (கூக)

தென்னே வுருத திருவெற்றி யூரிலெந்தாய்
சென்னே நெறியோதித் தேவி நறுமுறுப்ப
வுன்னே டிடப்பா லுறைவுள்ளி யூங்குகப்பே
னன்னே பவக்கடல்வீழ்ந் தாழ்ச்சிமுறை யோமுறையோ. (கூஉ)

செய்யோய் சிவனே திருவெற்றி யூரிலெந்தாய்
பையோ வெனுமல்குன் மோகினியாய்ப் பற்றுபுநின்
மெய்யோ கையிற்புணர்ந்து சாத்தாவை மேனுயிர்த்தே
னையோ பவக்கடல்வீழ்ந் தாழ்ச்சிமுறை யோமுறையோ. (கூங)

அச்சோ மனுவெனக்கொ ளண்ணல்வெற்றி யூரிலெந்தா
யச்சோ வழிப்பானீ யூர்ந்த வகனிலத்தே
ரச்சோடி யற்றுழியே ருகியுனைத் தாங்கியயா
னச்சோ பவக்கடல்வீழ்ந் தாழ்ச்சிமுறை யோமுறையோ. (கூச)

பஞ்சகத்தால் விண்டு பழிச்சு முறையிடு
வஞ்சகத்தார் வார்த்தைபுகா வள்ளல் செவிப்புகலு
நெஞ்சகத்தை வெளவு நிலவுலவு வேணிமுக்க
ணஞ்சகத்து நின்று நகுகளநாற் றேள்பொலிய. (கூரு)

எண்ணியவெக் காலுமன்பர்க் கீவா னிமையாச்சேற்
கண்ணியமர்ந் தோர்பாற் கலந்திலங்க நந்திகண
நண்ணியமன் றேத்த நமாது பரமபதி
புண்ணியசொ ரூபவிடை யேறியெதிர் போந்தனனால். (கூசா)

நாடினு னன்றுதிருக் கோலத்தை நாரணனே
ரோடினன் சித்தத் துவகை யுவட்டெழலா
லாடினன் வீழ்ந்தா னழுதான் றொழுதெழுந்தான்
பாடினன் சாமம் பரவசனாய் நின்றொழிந்தான். (கூஎ)

பின்னரொரு வாறு தெளிந்து பெருமானை
யன்னமலை மன்ன னளித்த சிறுமானை
நன்னரடி போற்றி நயந்தெம் மிருகுரவீ
ரென்ன தவஞ் செய்தே னெளியேனீ ரிங்குவர. (கூஅ)

என்றுபரா யம்பகங்கா லின்ப வருவியுரக்
குன்றிழியத் தாலுக் குழறப் புளகரும்ப
வொன்றுமுடல் கம்பிப்ப வுள்ளங் கரைந்துருக
நின்றவனை நோக்கி நிமலன் மணி வாய்மலர்வான். (கூகூ)

நல்லபுரு டார்த்தமொரு நான்கையுங்கா முற்றோர்க்கு
வல்லைதர வற்றாகி வல்லர்வேற் றாரையெல்லாம்
வெல்லுதலின் வெற்றிநகர்ப் பேர்த்தாய வீண்டெமைநீ
யொல்லுவகை யன்பா லுளுற்றுவழி பாடுவந்தாம். (க00)

வேட்டவர மென்னை விளம்புதியே லீதுமெனக்
கேட்டபுயல் வண்ணன் கிளப்பான் பிருகுமுனி
மாட்டகலாக் காதலியென் மாமி தயித்தியரை
வீட்டவிடாக் காரணத்தவ் வெய்யாடன் மெய்போழ்ந்தேன். ()

கண்டவிரு டீசன் கனன்று பிறப்பொருபான்
மண்டலமீ யெய்துபுநான் மையாக்கு மாவைதான்
றண்டமிது நன்றுகத் தன்கருணை பாலித்துத்
தொண்டனேற் காத்தி சுயம்புவே யென்றிரந்தான். (கOஉ)

அக்கூற்று வார்குழைக்கா தண்முதலும் வேதாதி
யெக்கூற்று நூலு மினிதுணர்ந்த மாணிநற
மிக்கூற்று வண்மலராற் பூசித்து வேண்டலுங்கோ
பக்கூற்று மாற்று பதத்தான் பகர்கின்றான். (கOந)

சொற்ற பிருகுவெனுந் தூயோன் சடசித்தா
வுற்ற பிரபஞ்சத் துள்ளெமையு மூவிதத்தெண்
ணற்ற பசுவோ டளப்பரும்பா சப்பொருளைக்
கற்ற புலங்கடந்த நம்மகத்துங் காண்கிற்போன். (கOச)

ஆர்த்தி யறியாத வனையதவ னேத்திரமெம்
மூர்த்தியொழித் தொன்றையுநா டாவம் முனிவாக்கெஞ்
சீர்த்தியல தோதா தவனுடைய சிந்தனையெம்
பூர்த்தியிடை யன்றிப் புணராதா லெப்போழ்தும். (கOரு)

முற்றுணர்ந்தேங் கண்ணன்னுன் வைத்தமுதிர் மெய்யன்
பிற்றெனவொண் ணுதேனு மீண்டொருவா றுயுங்கா
னற்றகுதி சால்யாய்க்கு நாள்பலபன் னெனபுழந்து
பெற்றவிளஞ் சேய்பாற் பெருகுபரி வெற்றற்றே. (கOசு)

அன்மருவா நெஞ்சத் தவன்கரத்தா லர்ச்சிக்கும்
புன்மலரெம் மெய்க்குமைமென் பூங்கையினூங் கின்புறுக்குந்
தொன்மறையோ னேத்தெடுப்புச் சொன்னால்வா யானிளவல்
சின்மழலை வார்த்தையினு மெஞ்செவிக்குத் தித்திக்கும். (கOஎ)

ஏதுக்க ளாலு மெடுத்தமொழி யாலுமிக்குச்
சோதிக்க வேண்டா துணிந்துசிவ சோதிதனைச்
சாதுக்கள் சார்கவெனச் சாற்றுமறை யுய்த்தறிந்து
மாதுக்க நீங்கநமை வந்தடைந்தா னப்பெரியோன். (கOஅ)

நீவரிய நீள்சுருதி நின்னை விதியையும்பர்
காவலனை யென்றாழைக் காமர் மதியைவிண்கால்
பாவகனீர் மண்ணைப் பரமென்றுங் காங்கிசைப்புச்
சிவபரி பக்குவத்தை நோக்கியெனச் சிந்தைதெளீஇ. (க0கூ)

மேதகவி னோங்கி விளங்கு நிகமாந்தந்
தீதியலாச் சுத்த சிவமே தியேயபதி
யேதிலரெல் லாமவனை யெண்ணியின்பு மேம்பசுவென்
றோதியமெய் யோர்ந்தெமது தாள்சேர்ந்தா னும்மேலோன். ()

சத்திநி பாதந் தலைப்பட்டார் தம்பொருட்டியா
முத்திநெறி நான்காப் பாத்து மொழியருணு
னத்தி யுணர்ந்துபர ஞானமுறீஇ யெம்மொடுதா
னத்துவித மாய்ப்பே ரானந்தந் துய்க்கின்றான். (ககச)

அன்னு னிடுசாப நாமு மனுக்கரிது
பொன்னுக வின்னும் புகல்கின்றுங் கேளித்தை
யின்னுத வெஞ்ஞான்று மெய்யாநந் தொண்டரொன்று
சொன்னுற் பயந்தன்றி வாளா தொலையாதால். (ககஉ)

பல்லா யிரவியவு ணீத்தெமையே பற்றியுளா
ரெல்லா வுலகு மினிது படைத்திருவி
நில்லா தழித்து நினைப்பின் மறைத்தருள
வல்லா ரெனினனையார் மாண்பினியென் செப்புவதே. (ககங)

பூவருபொன் வாழ்க்கைமனை புத்திரர்தாய் தந்தைதமர்
யாவருநம் பூங்கழலென் றெண்ணியிறு மாப்போர்க்குத்
தேவர்முத லோர்வணங்கித் தொண்டு செயற்பால
ரேவலவர் கோள்வெஃகின் யாமுமரு மன்னே. (ககச)

உள்ளமெமக் கீந்த வுழுவலன்பர் மேம்பாடு
கள்ளவிழுஞ் செய்ய கமலத் திருந்தயனே
விள்ளவொரு சற்றும் விறலில்லா நீயுமன்னை
தெள்ளவிதந் தோதுந் திறத்தா ரெவரம்மா. (ககரு)

வானந் துளங்கினென்னை மண்கம்ப மாயினென்னை
தானம் பெயர்ந்துவரை தான்றடுமாற் றெய்தினென்னை
மீனம் படிலென்னை வெய்யசுடர் வீழினென்னை
யூனந் தழாதநமக் காட்பட்ட வுத்தமர்க்கே. (ககசு)

ஓட்டிலொளிர் காஞ்சனத்தி லொத்தியங்கு முள்ளத்தார்
கேட்டினொடு மாக்கங் கெழுமாத் திருவுடையா
ரீட்டியபே ரன்பா லெமைக்கும் பிடலன்றி
வீட்டினையும் வேண்டார் விறந்தநெடுஞ் சீரடியார். (ககஎ)

ஆயாதி யம்புமெழுத் தைந்துடைய மெய்த்தொழும்பர்
பேயாதி யாவணுகல் பேர்கென்பர் காலனைவெந்
நோயாதி நோவரினு நூறினிவை யெம்பெருமா
னீயாதி யென்று பிறதெய்வ நேர்ந்திரவார். (ககஅ)

வெண்டிரு நீறே விரைநாறு சாந்தமாக்
கண்டிகையே சாலக் கதிருமணி யாரமாத்
தொண்டினிதெம் பாற்புரிவே தொல்லைமுறை செய்தொழிலாக்
கொண்டிறுமாந் தின்புறுவோர் யாதுங் குறைவில்லார். (ககக)

தாமருவு காயமுதல் யாவுநம்பாற் றந்தொழிந்தார்
யாமதை வேறொருபற் றின்மையா லூடுவது
மாமகிழ்வு மெங்கண்ணே வைத்த தொழும்பர்புரி
நாமலியுந் தீயவற்றை நல்லவென நாங்கோடும். (கஉ0)

மாதிவளை வாமத்து வாழ்வித்த நம்பொருட்டுத்
தீதுபல வாற்றினரு மீண்டு திருவடிபுக்
காதரவால் வேண்டிடின்யா மாற்றுவோ மன்பருக்குப்
பேதையர்கள் செய்புன் பிழையும் பொறுக்ககிலேம். (கஉக)

சித்த மிறந்து சிவாநந்த மேலீட்டாற்
பித்த ரெனவும் பெரிது பிசாசாவே
சத்த ரெனவுமுழி தந்திடுவ ராயினுநம்
பத்தரை யாமாகப் பாவித்தல் வேண்டுமொல். (கஉஉ)

என்னவொரு வாறுதொகுத் தியார்க்கு மளப்பரிய
தன்னடியார் சால்பனைத்துஞ் சாற்றித்தற் சார்ந்தவரி
யின்ன லுழவாமை யிருடிமொழி பொய்யாமை
யன்ன கடவுண்ட வமுதவாய் விண்டருள்வான். (கஉங)

பந்தமிலான் சொற்றுங்கு நீமேம் பவம்பத்து
ளைந்தி லனுக்கிரக மற்றைந்தி னிக்கிரக
நந்த விழைத்துன்னை நயந்தாள்வோ நின்பிறவி
யுந்த வுலகிற் குபகார மாய்முடிக. (கஉச)

என்ற திருவாக்குக் கேட்டலுமே யிந்திரைகோ
னன்று மகிழ்கூர்ந்து நாயகநீ நேர்போந்து
மன்ற வருளொறுப்பு வைத்தாள வென்னேற்றேன்
முன்றமியே னென்ன மொழிந்திறைஞ்சி நின்றாற்கு. (கஉரு)

வெள்ளியமெய்ச் செங்கண் விடையான் விடைகொடுத்துப்
பொள்ளெனத்தொல் வன்மீகப் பொற்குழியின் பாற்கரந்தா
னௌ்ளொளிக்க வுத்துவஞ்சே ரோங்கன் மருமத்தான்
மெள்ளவரி தந்திலொரீஇ வைகுண்ட மேயினன். (கஉசு)

வேறு.

வெருவொ ழிந்தவன்
றிரும டந்தையை
மருவி வாழுநான்
ஞெருதி னத்தரோ. (கஉஎ)

சோம கன்னெனு
நாம தானவன்
பூம ணித்தர்துன்
றீம வாயினன். (கஉஅ)

ஆவ வந்தணர்
தேவர் தாபதர்
யாவ ருந்துயர்
மேவ ரும்படி. (கஉகூ)

நாத ரூபமாம்
வேதம் வேள்விநீ
டோத நீரினுட்
போத ராப்புக. (கஙo)

பின்றை வேட்பிவட்
பொன்றி மாய்தலிற்
கன்று வெம்பசி
துன்ற மாழ்கியே. (கஙக)

சுரரோ டிந்திர
னுரவு நேமிபூங்
கரம ணிந்தவற்
சரண டைந்துமேல். (கஙஉ)

அறையும் வெய்யவன்
மறைக வர்ந்தமை
முறைக ரைந்தவற்
பறைவி யென்னலும். (கநந)

கேட்ட வச்சுத
ஞட்ட மேனியாய்
வாட்ட நிற்செய
வேட்ட வஞ்சனே. (கநச)

கோறு மஞ்சனீ
சேறி யென்றசொற்
றேறி மீண்டனன்
வீறு வச்சிரன். (கநரு)

பின்னர் நாரணன்
சொன்ன தீயவன்
றுன்னி வைகிட
முன்னி யோர்ந்துடன். (கநசு)

பிருகு சாபமும்
பொருவி றெய்வமும்
பெரிதி யக்கலா
விருநி லத்திழீஇ. (கநஎ)

மயிலை யாய்ச்சனித்
தயிர்கொள் வார்கடற்
பயில்பு சோமக
னுயிர்கு டித்தனன். (கநஅ)

உகவை நெஞ்சின
னகல்பு வித்தல
மிகவ ளத்தக
நிகம நாட்டினுன். (கநகு)

தோமளாவிய
சோம காசுரக்
கோம கன்றனே
யாம லாதியார். (கசo)

முருக்கி யாரணம்
பெருக்கு வாரெனுக்
கருத்த கத்தறச்
செருக்கு கிற்புழி. (கசக)

நெடுங்க டற்குண்முன்
மடிந்த பாவியோ
டடங்கு றைந்துளான்
மிடைந்த வென்றியான். (கசஉ)

வந்த டார்த்தலுஞ்
சந்த மீனுருத்
தந்த மாதவ
னந்த வாதனை. (கசங)

யசன மாந்தர்பால்
விசன மூட்டபெஞ்
சசன னைச்சம
னசன மாக்குபு. (கசச)

வெங்க ணனைவ
னங்க மாகிய
சங்கம் வேய்ந்தனன்
பொங்க மீக்களி. (கசரு)

இருவ கைப்பட
வருத ருக்கன்வீங்
தருகு ணர்ச்சியன்
பெருமை யக்கினன். (கசசு)

நிலத்தொன் றுவிமுற்
றலக்கண் சேரிய
நலத்தம் போதியைக்
கலக்கங் கண்டனன். (கசஎ)

மேல மாதிரப்
பால னிங்கணை இக்
கால காலன்மாட்
டோல மிட்டனன். (கசஅ)

குகன்ற ஞுறழ்
விகந்த தாஞுவவ்
வுகண்ட மீன்கஞே
டகந்தை கட்டனன். (கசகூ)

வேறு.

ஈத மைஇக விபச்சத
மேத னம்பன் வியன்பிர
சாத மெள்ளிய தன்மையான்
மாத வத்துரு வாசனும். (கடு0)

முத்தன் வைதனு மூழ்கிய
மெத்து பல்வள மீட்கிய
துத்த வன்கட றெல்வரை
மத்து நட்டு மதிக்குநாள். (கடுக)

அந்த மந்தர மாழ்வுகண்
டுந்து மாறுனி யும்பர்கோ
னந்து தாங்கியை நண்ணின
னெந்தை காத்தி யெனத்தொழ. (கடுஉ)

மாமை நீனிற மாயவன்
றீமை தீர்ந்த பயோததி
சீமை யூடமிழ் திண்கிரி
யாமை யாயுருத் தாற்றினுன். (கடுங)

நரலை நன்று கடைந்திடக்
கரவு கொண்ட கணக்கிலாத்
திரவி யங்கள் செறிந்துமேல்
வரனு மோகையன் வாசவன். (கடுச)

கவர்பு சென்று கவின்குலா
வுவனை யுற்றன னுற்றபி
னிவறு கிற்பதொ ரித்தொழி
லெவரி யற்றுவர் யாமலால். (கடுரு)

என்ன வெண்ணுபு கேசவன்
முன்ன மொப்ப முனைத்தன
னன்ன தன்மை யறிந்துதீங்
கன்னன் மொக்கு கணேசனை. (கடுசா)

உய்த்தக் கூர்மவெந் நோட்டொடு
தைத்துச் செற்றிய தற்பமும்
புய்த்திட் டேழ்பொழில் போற்றினன்
மைத்துச் சீர்த்த மணிக்களன். (கருஎ)

வேறு.

நிற்க வின்னது நீடு மாற்றலா
னெற்க மின்றுபெற் றுளவ ரத்தினன்
பொற்க ணனெனப் பெயரி யான்புவிப்
புற்க லர்க்கெலாம் புதிய கூற்றனன். (கருஅ)

பண்டு வையகம் பேர்த்துப் பாதலங்
கொண்டு சேறலுங் கோணை விண்ணவர்
விண்டு வின்புடை விளம்ப வெந்திறன்
மண்டு வன்றியாய்த் தோன்றி மாலவன். (கருகூ)

இரணி யாக்கனை யிணைம ருப்பினன்
முரணி யீர்ந்துடன் முருக்கி முன்னையிற்
றரணி தாபியாத் தன்னை யின்றியோர்
சரணில் பார்க்கெனத் தருக்கி விஞ்சுபு. (கசூ0)

உலகி னுக்குநோ வுறவு ஊத்தல்கண்
டலரின் மன்னியா னதி வானவர்
நிலவு லாவிய நீர வேணியன்
மலர டித்தொழா வரவு ரைத்தனர். (கசூக)

நாட்ட மூன்றுடை நாத னெய்யென
வேட்டு ருக்கொடு போந்து மேதினி
கேட்டி னீங்குமா றனைய கேழலின்
கோட்டை வேரறக் குற்ற னிந்தனன். (கசூஉ)

சில்ல வானியஞ் சென்ற பின்றைவா
ளெல்ல னுக்குமெய் யிரணி யப்பெய
ரல்ல டர்ந்தவுள் ளவுணர் காவலன்
பல்ல வல்வரம் படைத்து ளானரோ. (கசூங)

உரவு நீர்முடை யிப்பி யொள்ளொளித்
தரள மாமணி தன்னை யீன்றெனப்
பிரக லாதனும் பெயரி னோங்கிய
வரகு மாரனைப் பயந்து வாழுநாள். (கசூச)

உலகம் யாவையு முறுக ணேய்த்தனன்
புலவ ரச்சுதன் புடைய வன்புரி
கலக மோதலுங் கண்ணன் றேன்றுபு
வலன மன்றதோர் நரம டங்கலாய். (கசுரு)

தந்தி போலுமத் தான வேசனை
யந்தி மாலைவா யணிகொள் வாய்தலூ
டுந்தி யூருவார்த் துகிரி னுடல்
கொந்தி யீர்ந்திழி குருதி மாந்தினன். (கசுசு)

மையல் விஞ்சினன் மன்ப தைக்கஞர்
செய்ய லுற்றனன் றிருவு மன்புடை
வெய்யன் மஞ்சனும் வேண்டிக் கூறிய
தெய்ய வின்மொழி சிறிதுங் கேட்கலன். (கசுஎ)

பிரம னந்நிலை பிறங்கு கைலையிற்
பரம னேன்கழல் பணிந்தி சைத்தலுங்
கரப நேர்கவான் வாய்த்த கௌரிகோன்
சரப மேனிதான் றரித்தெ ழுந்துபோய். (கசுஅ)

மாய வன்னெனப் பட்ட மானிடச்
சீய யாக்கையைச் செற்றிக் காலிடைத்
தூய துண்டத்துத் துண்டங் கண்டதள்
சேய நாப்பண்மீச் சேக்கி வீக்கினன். (கசுகூ)

முழங்கு சீரதிஃ தமைக முத்தலன்
வழங்கு சக்கர வர்த்தி மாவலி
தழங்கு ரற்கழற் றனுச நாயகன்
பழங்க ணண்டரைப் படுத்து வைகினன். (கஎo)

யாக மொன்றனு னியற்று மேல்வையின்
மாக ரேகினர் மாலு ழைத்தம
சோக மோப்புமா சொற்றி றைஞ்சவற்
ருக வென்றரி யதிதி மேல்வயின். (கஎக)

மதிப்ப ருங்குறள் வடிவ மாணியா
வுதித்து நேர்படர்ந் துலகின் மூவடி
யிதிப்பி டந்தர வேண்டு மென்னவாள்
விதிர்க்கு மாவலி வேந்தை யேற்றனன். (கஎஉ)

அத்த யித்திய னளிப்ப வானொடு
மித்த டப்புவி யீர டிப்படுத்
துத்த மப்பதத் தொன்ற வன்முடி
வைத்த மூத்தினன் பிலத்து மாழ்குற. (௧௭௩)

மாவ லிப்பெயர் மன்னே யங்ஙன
மாவ லித்திட வமிழ்த்தி னுமெனப்
பூவ லிக்குரந் தந்த புங்கவன்
றுவ லிற்கிளர் தருக்கு நெஞ்சினன். (௧௭௪)

உயிரெ வைக்குமிக் குலேவி ழைத்தலுஞ்
செயிரி னீக்குவான் சிவனு ணர்ந்தடல்
வயிர வற்கொடவ் வாம னன்றனுப்
பயிறு வக்கினைப் பகிர்ந்து ரித்தெடா. (௧௭௫)

அரிய கஞ்சுக மாத்த ரிப்பியூஉக்
கரிய னீடகங் காரந் தீர்த்தென
விரிக டற்படி விசும்பு பாதலக்
கிரிவொ ழித்தன னீது நிற்கவே. (௧௭௬)

சமத மச்சம தக்கி னிப்பெய
ரமல மாமுனி யயர்ந்த நோன்பினற்
பிமர மில்லவன் பன்னி பெய்வளேச்
சுமதி ரேணுவை கருவுட் டுன்னுபு. (௧௭௭)

சுரபி நாண்மலர்த் தோகை மார்பினு
னரன ருட்கிலக் காத ரோன்றுமா
பரசு பாணியாய்ப் பவித்தி ராமநாம்
விரவி விற்றெழின் மேதக் கானரோ. (௧௭௮)

தாதை யாணையாற் றாயைச் செற்றவற்
காதி யிட்டமன் கார்த்த வீரியன்
வீத லெய்திய விளித்துக் கோக்குலம்
பேது றச்சுலாய்ப் பெரிது நூறினன். (௧௭௯)

அத்தி தோடநேர்ந் தச்சு றுத்தலுஞ்
சித்த மேனிமை யாந்து தேம்பியோ
னெத்தி றத்தினு விஃது தீர்மெனு
வுய்த்து ணர்ந்தியோ குழந்து தேறுபு. (௧௮0)

வெற்றி மாநகர் மெய்த்த னிப்பழம்
புற்று நாதனைப் போற்றிப் பூசியாத்
தற்று யர்த்ததீஞ் சாயை நீத்தொளி
பெற்று வையமீப் பிறங்கு கின்றனன். (கஅக)

கேச வன்பினர்க் கிளர்செங் கோலினாற்
சாச னங்கடாங் தயர தற்குரிக்
கோச லைப்பெயர்க் கொம்ப னுள்கருப்
பாச யத்திலுற் பவம ரீஇயினன். (கஅஉ)

இராக வாக்கியை யேய்ந்து தாடகை
விராதன் வெங்கவந் தன்சு வாகுவெந்
தராவி ராவணன் றம்பி யின்னரைப்
பொராவி ளித்தனன் போரி னென்பவே. (கஅங)

மாத ரெண்ணிலா வாகை வீரரென்
ரோத நின்றவ ருயிரை வௌவிய
பாத கக்குலம் படிவு கொண்டெதிர்
போத லுற்றிடர் புரிந்த லைத்ததால். (கஅச)

மதியல் லாந்துடன் மழுங்கி யன்னவன்
பொதிய மால்வரைப் போந்து பொன்னிநன்
னதியொ டுந்தமிழ் நல்கி யாழியுண்
பதித பாவனன் பாற்ச ரண்புக. (கஅரு)

அகத்தி யப்பிரா னபய மீத்தனன்
சகத்தின் மிக்குயர் சயபு ரித்திசை
யுகப்பின் வாழ்வுகூ ருமையொர் பாகனை
யிகப்பில் பூசனை யியற்று கிற்றியேல். (கஅசு)

வன்ப ழித்திரண் மாண்ம தான்றுநின்
றுன்ப மேனவுந் துமியு மென்றலு
மன்ப தத்தினை மறுவ லும்பணிந்
தன்ப னம்முனி யனுஞை யேற்றெழா. (கஅஎ)

மதுகை யம்பதி மருவி யுற்பலம்
பதும மல்கிய பரசு தீர்த்தநீர்
கதுமெ னக்குடைஇக் கண்டி நீறணீஇ
முதுவன் மீகமா முனைவன் கோயிலுள். (கஅஅ)

வேறு.

வேகந்தப மெல்ல வலங்கொடுபோ
யேகந்திகழ் தந்தி யிளங்குமரன்
பாகம் பிரியாதவள் பாதமல
ராகம் புவியண்ம வணங்கியரோ. (௧அ௯)

பழம்புற்றிறை பாங்க ரணைந்துதொழூஉ
முழங்கிப்பொலி சீர்த்திய மூர்த்திதனை
வழங்குற்ற சிவாகம வாய்மையினொ
டுழந்தற்பொடு பூசை யுஞற்றினனால். (௧௯0)

ஆராதனை யாற்றிய தாசரதி
நீராடென நேத்திர நின்றிழிய
வேராடிய மெய்புள கெய்தமுடி
யேரார்கர மேறிய வேத்துதலும். (௧௯௧)

பத்திக்கு மகிழ்ந்து பரன்குறியி
னெத்திக்கு மிலங்க வெளிப்படுபு
தித்திக்கு மொழிச்சிவை யோடணுகி
யத்திக்குழு வீடிய தஞ்சலென. (௧௯௨)

இருமைக் குரவீரு மெனக்கெதிரே
வருதற் கறன்யாமுன் வகுத்தனனென்
றுருகச் சிலைவீர னுரைப்பநெடுங்
கருணைக் கடலாகிய கண்ணுதலோன். (௧௯௩)

வரம்பற்ற வரங்கள் வலிந்துதவிக்
கரந்திட்டன னாக விராகவன்மிக்
குரம்பெற்றரி தங்க ளொரீஇத்தனது
பரம்புக்குயர் போக மடுத்தனனே. (௧௯௪)

அலகிற்றவிர் வைக லகன்றபினர்
வலவைத் திருமால் வசுதேவன்மனை
மலர்கற்பெழின் மாதர் வயிற்றுதியாப்
பலபத்திர கண்ண ரெனப்படு. (௧௯௫)

வளர்கின்றுழி வீதியின் வாயொர்பசுத்
தளர்வொன்றி விழுந்தது தான்றெரியூஉ
வளமந்தனன் மூத்தவ னங்கையினால்
வளன்விஞ்ச வெடுத்தலு மாய்ந்ததரோ. (௧௯௬)

அக்கோவத வன்பவ மட்டிடுவான்
மிக்கோத வியன்கடன் மேதினியெண்
டிக்கோடுபு தீர்த்தமெ லாங்குடையா
வெக்கோயிலு மீசனை யேத்தினனல். (௧௯௭)

சேதுத்தனி யாத்திரை செய்யவலீஇப்
போதுற்றவ னல்விதி புக்கமையான்
மேதக்க விறற்புர மேமளவிற்
றீதற்கு பழிப்பொறை தீர்வுணர்பு. (௧௯௮)

இறும்பூதின னீர்ம்பில கங்கைபடீஇ
நறும்பூதியொ டக்க நயந்தணியூஉ
வுறும்பூசை பிரானை யுஞற்றியமா
சறும்பூமுத லாய கலப்பைகொடு. (௧௯௯)

வரதத்திரு மந்திர வாய்க்குறுகிப்
பிரதக்கிண வந்தனை பெட்டிழையாப்
புரணத்தியல் புற்றுறை நாயகனைத்
திரவத்தின னர்ச்சனை செய்துதொழ. (௨௦௦)

மறிதங்கிய வண்கைய னோர்வடிவாய்க்
குறிநின்றெதிர் கொம்மென வந்தருளி
யறிவின்றி யடுத்த வறன்கடைநிற்
பிறிதந்தது வெஃகிய பேசெனலும். (௨௦௧)

எளியேன்பவ மெத்தனை சாரினுமுன்
னளிதேங்கு பதாம்புய நாண்மலரு
டளிபோன்றுற வேண்டுவ லையவெனக்
களிகூர்ந்தது நல்குபு கார்த்தகளன். (௨௦௨)

மாணித்திரு மேனி மறைத்தமைகண்
டாணிப்பொ னணிந்த வலப்படையைப்
பாணிக்கடை பற்றியு மாங்கொருவி
யேணிற்பொலி தன்னுல கெய்தினனே. (௨௦௩)

இவன்றம்பி பிறங்கடை யின்மைகுறீஇக்
கவன்றந்த வடற்புரி யைக்கலவித்
தவங்கன்றி யியற்றின னுத்தலையிற்
சிவன்பைங்தொடி யோர்புடை சேர்த்திலக. (௨௦௪)

மருங்கண்ணினர் பாரிடர் வாழ்த்தியிட
நெருங்கண்மைய னேற்றிடை நின்றருளக்
கருங்கண்ண னெழுந்து கழற்பணியூஉ
வொருங்குண்மை யுளத்தன் வழுத்துதலும். (உ0ரு)

நார்வைத்த துணர்ந்தன நாகின்வயிற்
சூர்வைத்த பல்புத்திரர் தோன்றுவரத்
தார்வைத்தவர் தம்மு ளொருத்தனை நம்
பேர்வைத்தழை யென்று பிரானகல. (உ0சு)

துனைவிற்று வரைப்பதி துன்னுபுமா
லினைவற்றன னீன்ற மகாருளொரு
தனையற்குரி மைப்பெயர் சாம்பனெனப்
புனைவித்து நிவந்து பொலிந்தனனே. (உ0எ)

கலியாலினி நீதி கவிழ்த்துயிர்கண்
மெலிகாலையில் வெண்பரி மாமுகனு
வொலிநீர்ச்சல வுங்க னுதித்தரியிம்
மலிசீர்நகர் மன்னு சிவக்குறியை. (உ0அ)

ஆராதன மாதர வாலிழையா
வாராவருள் வாய்த்து நெறிப்பிறழ்விற்
றீராதுழல் சேதனர் யாவரையு
நேராய வொழுக்கி னிறுத்துவனல். (உ0கூ)

திருவாசுகி யென்று திளைத்திடுகத்
திருவாசுகி யாதியி னுற்செறிவெங்
கருவாசுகி தந்துறு காதையிது
கருவாசுகி பேறு கதைப்பதினி. (உக0)

ஆகத்திருவிருத்தம். எகூஉ.

திருமால் வழிபடு படலம் முற்றிற்று.

---

## வாசுகி சிவத்துரோக நீக்கப்படலம்.

நன்மணித் துணிநீர் வாழ்க்கை நயந்தவு மூர்வ தாமு
மென்மயிர் கெழீஇய வொண்கேழ் வியன்சிறைப் புளளு மாவு
மின்மணங் கமழ நிற்கு மிணர்துறு மரனு மெல்லாம்
பொன்மய மாகி மிக்குப் பொலிவஃதொன் றுவனை யன்றே. (க)

நியமமின் றெவர்க்கும் வேட்ட நிரப்புக நிரப்பு கின்ற
வியலியல் காம தேனு விருநிதிப் பதும சங்கந்
தயலிணைம் பாத வஞ்சிந் தாமணி யவண வேலங்
குபர்திணை வண்மை யுண்மை யுரைப்பவும் வேண்டு மேயோ. (உ)

நவைப்பொதி யழுக்குத் தீய நாற்றம்வேர் வின்ன நீங்கிச்
சுவைத்தொறு மினித்தி யற்கைச் சுகந்தநன் றுமிழ்ந்தி யாணர்க்
குவைக்கல னுமு றுப்புக் கொண்டகப் பொருள ளிக்குஞ்
செவைப்படு தீஞ்சொற் றெய்வத் தெரிவையர் செறிவிற் றஃதே.

வாலிய சாயல் சேக்கி மதிப்பொரு மாண்சு வைத்தாய்ச்
சாலவு மேன்மைத் தன்மை தழீஇப்பரி மளமன் கான்று
நாலுமெவம் பொறிகட் கின்ப நல்குபு சாவா மூவாச்
சீலமும் பெறுத்தா நின்ற தெள்ளமு தாயி டைத்தால். (ச)

மருமலி பன்னி றத்த மலரிரு சிகைகண் வவ்விப்
பருகிய நனிதித் தித்துப் பரிசிப்பிற் றவத்தண் ணென்று
குருகதின் குரல்கா தார்த்துக் குளிக்குநர் பவஞ்ச வட்டி
வருபய னுயிர்மெய்க் கியும் வரநதி யாவ யிற்றே. (ரு)

நாவற லூறத் தோன்று நறும்பழுந் தளிர்க ளுன்று
காவத மாறு நூறு காறுநீண் முருகு யிர்த்து
மேவரு நறவு தெவ்வ மிஞிற்றொடு சுரும்பு மூசாப்
பூவர்கூர் கற்ப கப்பைம் பொதும்பரன் னுழிய மாதோ. (சு)

ஈண்டையார் கனவி லேனு மெற்றைக்கு முணர்ந்தி லாத
காண்டர நயனங் கூசுங் காசுங்கேழ் மின்னும் பொன்னு
மாண்டிழி யேவ லாள ரலகிடுங் குப்பை யென்றுன்
மாண்டகு செல்வப் பொம்ம லெம்மனோர் வகுக்கற் பாற்றே. (எ)

ஒவறு குமாரச் செவ்வி யொளிகிளர் யாக்கை வாய்த்தி
யாவதும் விதிநி டேத மென்னும்யாப் புறவின் றுள்ள
மேவன புரிந்து நாளும் விழுப்பெரும் போக முண்மார்
தேவராங் கிகவா ராயி னன்னதிற் சீரி துண்டே. (அ)

சேட்டவிர் துறக்க வாணர் சிகையுரந் திணிதோள் வேய்ந்த
தோட்டலர்க் கண்ணி தாமந் தொங்கலும் புலர்வ தின்றேன்
மோட்டடு பசிநோய் தாக முதலிய வற்று லன்னோர்
வாட்டமெஞ் ஞான்று மெய்யார் வயங்குத விறும்பூ திற்றே. (கூ)

அழிவொழி கற்ப நாட்டு ளரமிய மாடந் தெற்றி
பிழிமலர்த் தடனுய் யானம் பிறங்குசெய் குன்றி வற்றி
னெழினல மொருங்கு நாட வினிதுசூழ்ந் தவனு ளார்க்கு
விழிகள்சும் புளிபா வாக விதித்தனர் விதியார் மன்னோ. (௰)

போனிறச்* சுவர்க்க மன்னு போக்கியப் பொருளை னைத்து
மானிடாத் தூய வாய வாற்றினன் மறுத லைத்த
வீனிட மிதிப்ப தற்கு மினைந்தரு வருப்புற் றன்றோ
கானிலந் தோய்க லாமை கடவுளர் கடைப்பி டித்தார். (௧௧)

தாமரைக் கண்ணன் றன்வாழ் தனிப்பரந் தாமந் தன்னிற்
காமரு மல்லற் றுதல் கருத்திடை நுனித்துத் தெள்ளி
யேமவன் புரத்தி னிற்போந் துபேந்திர னென்னப் பட்டு
மாமகிழ் பூத்து வைகி னதனையார் வழுத்த வல்லார். (௧௨)

துன்பமார் கின்ற வைப்புச் சூர்த்தபா தாள மென்று
மன்பதை யின்பத் துன்ப மடுக்குந்தேம் வைய மென்று
மின்பமே நுகருந் தான மிணைதவிர் சேணு டென்று
முன்பனூல் கூறிற் றுயின் முதலுநீர்த் தியாத வற்றுள். (௧௩)

மூன்றன்மூ துலகத் துள்ளு முதிர்கதிர் விதிர்சு வர்க்க
மான்றதென் றறைய கிற்றற் கறிகுறி வேறு வேண்டா
கீன்றணி பிலமும் பாருங் கிழக்கவா யிழிந்தி ருப்பத்
தான்றக வோங்கி மேக்குத் தங்கலான் விளங்கு மாறே. (௧௪)

திருவுநல் லறிவுமொன் றிச் சேர்வருங் குரைத்†தெனுஞ்சொ
லருகவிட் புலத்துச் செல்வ ரடைமொழி யென்னு மின்றிக்
குருவெனப் பெயரி யானைக் குரவனுக் கொடுமேம் பட்டுத்
தெருளும்மன் னுடைய ராத றேற்றுமால் விபுத நாமம். (௧௫)

வேதத்து விதந்து ரைக்கும் வேள்விமுற் பலிற றத்த
மேதக்க வறங்கண் முற்றும் விதியுளி வழாமை யாற்று
தீதற்ற சான்றோர் பேறு திப்பிய சுவர்க்க மானு
லோதற்கு முணர்வ தற்கு மொண்ணுமே யுதன்வி ழுப்பம். (௧௬)

இவணுயர் மகளிர் மைந்த ரெழினகர் போகா திக்குத்
தவலில்விட் பொருளை யொப்பாச் சாற்றினர் கவிஞ ரெல்லா
முவமன்மற் றுவமே யத்தி னேங்குமேம் பாடு டைத்தென்
றெவருநன் றறிப வற்றே லெற்றுக்கு விரிப்பா னின்னும். (௧௭)

---

* போனிறம் - பொன்னிறம். இது சிந்தாமணி காந்தருவதத்தையாரிலம்பகத்து 297 - ம் செய்யுளுரையாலுணர்க,

†அருங்குரைத்து—அரிது.

இத்துணைச் சிறப்பிற் ருய விருவிசும் புவனை நாப்பட்
டத்தொளி வயிரங் கோமே தகமர கதமா ணிக்க
முத்தம்வை டூயங் துப்பு முற்படு மணிசெய் கோயி
லெத்திசை யிருளுங்கீறி யிந்திரற் கமைந்தன் றன்றே. (கஅ)

அதனிடை யவுண ராற்று மடைதுயர் சுரேசற் கென்றாழ்
முதலன கோளு நாளு முறையிட மொய்த்தாங் கெண்ணில்
விதவர தனங்க ளுன்று வில்லுமிழ் தருமத் தாணிச்
சுதன்மையிற் சீய வேறு சுமந்தமெல் லணையி னும்பர். (கசு)

மகபதி சசிதம் பாங்கர் வயங்கவீற் றிருந்தோர் கூற்று
னகமக ளிறைவன் சென்னி நண்ணுநாந் திருமான் முன்னோன்
றகவுடை முடித்து வாத சாந்தத்தின் மேலால் வைகன்
மிகமுறைத் தெனச்சேர் திங்கள் விழைபவெண் கவிகை யோங்க.

மின்னுடைச் செங்கோ லோச்சி விண்முழு தாளா நின்ற
தன்னுடைச் சீர்த்தி யீட்டந் தழைத்தபே ருவகை பொங்கித்
தென்னுடை யிரும ருங்குந் திரண்டெழீஇ யாடன் மானப்
பன்னுடைத் தரளக் காம்பிற் பானிறக் கவரி துள்ள. (உக)

பொய்யமை நுழைநு சுப்பிற் புலோமசை வாண்மு கத்தைத்
தெய்யமா மதியென் றோர்த்துத் தெவ்விய செவ்வி பார்த்துப்
பையநின் றுழல்பி யங்கும் பைபநீள் பாந்த ளேய்ப்ப
வையசாந் தாற்றி செற்றி யசைந்திளங் காறி ரட்ட. (உஉ)

அழகெனும் புணரித் தோன்று மறல்கரு நெய்தல் முத்த
நிழன்மணி பவளகண்ட நீர்நிலை பணில மொக்கு
ளொருகலை சுழிம னற்குன் றொளிர்ஞெண்டு வரால்கூர் மம்போல்
விழுமிப வவய வத்து மேனகை யடைப்பை யேந்த. (உங)

அளகமாம் பைம்பொ ழிற்கி ழவிருமா வடுக்கு மிழ்ம்பூத்
தளவரும் பிலவு வீழி தண்கமு கமைதெங் கங்கா
யிளமையா லரசி வற்றி னிலமகிழ் கதலி யென்ன
வுளனிவ ருறுப்பு வாய்ந்த வுருப்பசி களாசி யேந்த. (உச)

நிலைஇப நலத்த தான நேரிழை மின்ன னுருட்
டிலைமையா டானே யாய தகுதியை யெளிதி யார்க்கு
மலைவற வவர ரம்பை மாரெனும் பெயர்தெ ளிக்கு
மலைகட லமிழ்தின் சாய லரம்பைகோ டிகப்ப ரிக்க. (உரு)

பொதுவொழித் தொருபெண் பூத்தும் புதிதென மாத ரங்கங்
கதுவிய வுபர்பு மிக்க கவின்றெறெட் டனேகொண் டாக்கிச்
சதுர்முகன் றன்பே ரல்கு றழால்வலா ததுபோ னுறும்
பதுமகள் வதியச் சீர்த்த திலோத்தமை பண்ணிற் பாட. (உசு)

இங்கிதத் திறத்தாற் காம வின்பநூற் பயன்வ யக்கிச்
சங்கிதக் கருவி யைந்துந் தழங்கவுண் ணெகிழ்ந்து கண்டோ
ரெங்கிதற் கொப்புண் டென்ன விலதையின் வேறென் றோர்பாக்
கங்கிதத் திலக மிட்டா ரரமக ளிர்ந டிப்ப. (உஎ)

புணர்ந்தகப் பொருள்கூட் டுண்டு போகியை யென்றுந் தீரா
ளணங்கயி ராணி யென்னு வனேயளே நோக்குந் தோறும்
வணங்கொள்சித் தியரி யக்க மாதர்கந் தருவ நல்லார்
மணங்கமழ் குழலின் விஞ்சை மங்கையர் நறுமு றுப்ப. (உஅ)

திருந்தெழிற் செறிகண் மிச்சி நீர்க்குநள் சேய்பாற் றுய்போற்
பெருங்கிரி மணத்தெங் கோனும் பிராட்டியை யின்ன னீரை
யிருந்திடு கென்னக் காட்டு மேற்றருஞ்சா றிண்மைக் கற்பி
னருந்ததி யருள்கூர்ந் தொண்ணீ ராசன மெதிர்சு ழற்ற. (உகூ)

பெருகிய பவக்கு ழாந்தம் பெயர்கிளப் பளவிற் பாற்றுந்
திருவுடை யைவ ருள்ளுஞ் சிறந்துள கன்னி யாய
வருமணிப் பாவை யன்ன வகலியைக் கிளியு பேனே
யிருடிபன் னியரும் பல்லாண் டிசைந்தவன் பாலி சைப்ப. (௩௦)

விற்படை வல்லன் மாயன் வீறருள் செல்வி கேள்வன்
பொற்படை யான்ம வர்க்கம் புரக்குமா லேனுந் தம்பா
லற்படை யாமைகாணி னவன்பொலி வனேத்து மாங்கே
சொற்படை கொடுநா ளுற்றற் றாயவ ராசி கூற. (௩க)

என்னேநின் வேட்கை யீகென் றின்னுயி ரினுஞ்சி றந்த
மின்னுமேற் றணவாழ் வீதி விடங்கனுந் தியாக ராசன்
றன்னேமுன் முசுகுந் தற்குத் தந்ததன் பெருவள் ளன்மை
யின்னன பிறபு கழ்ச்சி யெடுத்துவந் தியரி யம்ப. (௩உ)

கலங்கனு ருலகுக் கேய்த்த கடியரண் மூன்றுஞ் செற்ற
விலங்கிழை பாகன்மான விருமைமிக் குயர்பு திட்பம்
விலங்கலில் விலங்கற் கெல்லாம் விரிசிறை யறைசெய் வாதித்
துலங்குறு பிரதா பங்க டொடுத்துமா கதர்மு ழங்க. (௩௩)

இருட்குழற் பொன்னூர் மார்பத் திளையவ னிடத்தி ருப்பத்
திருத்தகு வடிவா லீசற் சிவணிய பன்னோர் கோடி
யுருத்திரர் வலப்பான் மன்ன வுவரெண்ணி னிரட்டி கொண்ட
வருக்கருள் ளிட்ட தேவ ரனுக்கவான் பணிக்க ணிற்ப. (௩௪)

கருடர்கின் னரரி யக்கர் கந்தரு வத்தி னோர்கிம்
புருடர்நீ டுரகர் சித்தர் புகரில்விச் சாத ராதி
வருபதி னெண்க ணத்தர் வாய்மையிற் புதைத்தி றைஞ்சித்
தருணநன் கோர்ந்து தேர்ந்து தத்தம குறையி ரப்ப. (௩௫)

அணிகிளர் கற்ப மைந்து மருமுனி யாவுஞ் சிந்தா
மணியுநன் னிதியி ரண்டு மாண்கலை யுண்டி சாந்தம்
பிணியவிழ் மலர லங்கல் பிறங்கொளிக் கலனென் றின்ன
குணிதமில் பண்டம் வேட்ட குறிப்பறிந் துதவு கிற்ப. (௩௬)

இன்னணந் திருவோ லக்க மெய்திமூ வுலகு மாணை
துன்னவண் செங்கோ லோச்சித் துரிசற வாழு நாளி
லன்னவ னுக்க வீக்க மவுணர்நேர் கண்டுங் கேட்டு
மன்னமுக் கறுத்தார் தன்ன மனனமுக் கறுத்தி டாதார். (௩௭)

உரந்தகு தருவ ராயோ ரோருழிக் குழீச்சூழ் கின்றார்
வரங்கிடந் தெம்மை யீன்றாண் மாற்ற வளதிதி மைந்தன்
புரந்தரன் றிருவத் தோங்கப் பொலிவிழந் தியாமெல் லேமு
மிரங்குது மடவார் போனம் மெறுழினோ டுணர்ச்சி யெற்றே. ()

வரம்பல தவத்த ழைத்து வரம்பல தவத்த ழைத்து
நிரந்தர முயிர லைக்கு நீர்மையேம் வாளாங் குற்றாற்
பரந்தவா னவரே யல்லர் படித்தலை மனித்தர் தாமு
மரந்தைமிக் கார்த்து நம்மை யாட்கொளற் பால ரம்மா. (௩௯)

விலங்குகட் கிறைமை மேய விறலுடை வெங்கட் சியக்
குலங்கரிக் குழாத்திற் கோறற் குறிப்பொரீஇ வறிதி ருப்பி
னலங்குவெள் ளுளைய வன்ன வடலரி யேற்றி னத்தை
மலங்குபுன் னரியுமச்சோ மைத்துன முறைபா ராட்டும். (௪0)

ஆதலால் வாணாள் வீணா ளாக்கல மினித்து ணைந்து
காதலி னின்பந் துய்க்குங் கடவுளர் வருக்க முற்று
நோதக வமரி யற்றி நூறுநூ றாக நூறிக்
கோதறு மனையர் செல்வங் கூட்டுனல் கரும மென்றார். (௪க)

அப்பொரு ளுசனன் மாட்டாய்ந் தசுரர்கோ விசைத லோடுந்
துப்பொரு வீரெல் லீருந் தொல்படை சூலவி மொய்ப்பச்
செப்பொரு நொடியி லீண்டுச் சேர்மின்வேந் தாஞ்ஞை யென்ன
முப்பொரு முரசு ளொன்று முழங்கிற்றேழ் முகிலும் வெள்க. ()

அரைக்கணத் தீர்த்துப் பற்றி யற்றைநா ணமது வாசந்
தரைக்கண வாகிவிழத் தடிந்தவா சவனை யின்னே
யுரைக்கண வாத வன்போ ருஞற்றுபு வேறு மென்ன
வரைக்கணம் வருவ மான வந்தவா னிவந்த திண்டேர். (சரு)

வயமலி வச்சி ரத்தின் வைகலு முடல்பொ துத்தெம்
பியலிற நெருக்கி யூர்ந்து பீழித்தாற் பொருமா றேகு
முயர்கிரிக் குதவி செய்பாக் குறுதுணை யாது மென்னப்
புயலொருங் கணைந்தாங் கார்த்துப் பொழிமதக் களிறு போந்த. ()

குறியமெய்ந் நெடிய நோன்பிற் கொழுந்தமிழ் முனியா னம்மை
யறிகுறி யின்றுண் பித்திங் கபயம்புக் காற்செற் றுற்குச்
செறிதுயர் மால்வெற் போடு திளைத்தியாம் விளைத்து மென்ன
வெறிதிரைப் புணரி யேர்ந்த தேய்ப்பவாம் புரவி துற்ற. (சடு)

ஓர்வயிற் றுதித்தார் தம்மு ளொருவன்மற் றையரை யெல்லாம்
பேர்வற வாள்வெ னென்னப் பிணங்குபு கூற்றுங் காற்றுந்
திர்வருந் தழற்சித் தீயுஞ் சேர்ந்துருப் பல்வே றெய்திப்
போர்வலித் தரிமேற் செல்வான் புக்கெனப் பொருநர் புக்கார். ()

பெரிதலர் மாலைச் செக்கர் பிறைநகக் கங்கு றுன்சேர்
வரியவின் னுடற்ற மேனி யளப்பில பரித்துற் றுங்கு
விரிதரு சேந்த பங்கி வெள்வளை யெயிறு மின்னக்
கரியமா காயச் சேனைக் காவலர் மேயி னரால். (சள)

தானவர் தலைவ னெல்லாத் தானையுந் துறுத்த தன்மை
மானமி லுவகை பொங்க வாள்விழி குளிர நோக்கி
யானதொல் லமைச்சு நின்றுற் கண்டார்சீ ரமர்த்து வவ்வ
நானவின் முறைவ குத்து நோன்படை யெழுக வென்றான்.(சஅ)

பேரிகை முருடு மொந்தை பீலிசங் கிரலை காளம்
வாரியன் முரசு பம்பை மத்தளந் துடியி டக்கை
பாரிய முழவந் தாளம் படகமா குளியென் றிப்பஃ
றாரிய வகைத்து வைப்பின் றுழனிமுன் வான்புக் கன்றே. (சகூ)

கொழுங்கொடி யுகந்த வையங் கூம்புடை வங்க மாகச்
செழுங்களி வழுவைத் தோடு திணிந்தமுட் சுறவ மாக
வெழுந்துபா யிவுளி யீட்ட மீர்ந்தெளி தரங்க மாக
வழுங்கொலிப் பதாதி பென்னு மார்கலி நடந்த தம்மா. (ருo)

திண்மற லவுணர் ஞாட்புச் செய்யிய வருந்தி றந்த
னெண்மக னுதி யாய வும்பரை வெவ்வே றேத
மண்மக ளனுவிற் பல்ல வடிவெடூஉ மீப்ப டர்ந்தாங்
கெண்மலி யனிகப் போக்கி னெழுந்துகள் விசும்பிற் சென்ற. (ருக)

வேறு.

நயந்து மாற்றலர் நண்ணிய தேத்தெம்மா
லியன்ற வின்ன லியற்றுது மென்பபோ
லுயர்ந்து சேணுல கூறு படுத்துவ
வயங்கு றித்து வயங்கு பதாகையே. (ருஉ)

மட்டி கந்த வருதினிப் பொம்மலே
யிட்டி தேனு மிமையவர் கண்ணுறிற்
றிட்டி தோடஞ் செறிமென மாய்த்தெனப்
பட்டின் வண்குடை பம்பிப் பரந்தன. (ருங)

முன்னொர் ஞான்றெம் முதலுரு வவ்வினேன்
றன்னை மாட்டிய சாரு நிசிசரற்
கின்ன நன்றி யிழைத்துமென் றுரிரு
டுன்னு மாறு துதைந்த தழைப்பிச்சம். (ருச)

கோல வட்டத்தர் கூரிய வாளினர்
சீல வட்டத் திசைபுகழ் மள்ளரை
ஞால வட்ட நடைத்துயர் நீப்பவொத்
தால வட்ட மளித்தவங் கூழரோ. (ருரு)

அதிர தாதியர் தங்க ணமர்ந்தன்றிக்
கதிய கிள்ளை கரியுற்ற மர்த்தற்கு
விதியி லென்ன மிகக்களித் தார்ப்பபோன்
முதிர்மு ழக்கின முந்தின சந்தனம். (ருசு)

இதனி னுன்ற தில்லெனத் தேர்ந்துதம்
வதனம் வாய்த்து வலவைமன் னென்னர்க்கு
முதன்மை யெய்தின னென்று முனைத்தென
மதர்வி னேங்கி மதகயஞ் சென்றன. (ருஎ)

தங்கண் மாமுகஞ் சார்தலின் யாவையு
மங்க நுங்க வடவைவற் றுயதென்
றிங்க ணேணப் படையை யிகழ்ந்தெனத்
துங்க வாசித் தொகைசிரித் தேகின. (ருஅ)

இரதம் யானை யிவுளிபெ லாந்துணைக்
கரண மாகக் களத்துநி மித்தமாய்
விரவு மின்னரை வீழுங்கொ லென்பபோ
னரல வார்கழல் வீரர் நடந்தனர். (ருகூ)

அந்த வேலை யசுர குலாதிபன்
றங்க வெற்பிடைத் தாமரி யேறென
மங்க லப்பெரு வையமி வர்ந்தனன்
சங்க முஞ்சுர சங்கமு மேங்கவே. (சூo)

ஒற்றி னலிந் நிகழ்ச்சி யுணர்ந்தரி
யெற்றி னிச்செயற் பாலதெ னவிட
ருற்றி ரங்கி யுரைப்பரும் பொன்னுரை
யிற்றி ருந்தி யிருஞ்சமர்க் கேன்றரோ. (சூக)

தந்தி ரத்தின் றலைவரைக் கூய்நம
திந்தி ரப்பதஞ் சாடிய வெய்தினு
ருந்தி ரக்க முகுத்த தயித்திய
ரெந்தி ரப்படை யீண்டெழு கென்றனன். (சூஉ)

கடவு ளீரிறை கட்டளை யிற்றிதீண்
டடலி னீடவு ணர்க்கு நமர்கட்கு
முடல்வ டுத்தது மற்றையு றுப்பொடும்
படர்மி னென்று பறைபறை தந்ததால். (சூரு)

மதன்க லைப்பொருள் வல்லதங் கொண்கராற்
றிதங்கொள் செய்கையி னின்பு ததும்பிய
கதம்ப வார்குழற் கன்னியர் காஞ்சிசூழ்
நிதம்ப நேர நிவந்தசைந் துற்றதேர். (சூசு)

மலையும் வாட்கண் மகளிர்கச் சேர்ந்துவெம்
முலைக டுப்ப முகத்திற் படாம்புனை இ
யலைவி றிண்மைய வாகிச் செருக்கினுற்
றலைநி மிர்ந்து ததைந்தன தந்தியே. (சூரு)

கண்ணித் தார்ப்பொதுப் பெண்டிர் கருத்தென
மண்ணிற் பாய்வன மாதிரத் தோடுவ
விண்ணிற் செல்வன வேக துரகமாங்
கெண்ணிக் கோடற்கொண் ணுவகை யீண்டின. (சுசு)

மங்கை மார்கணைக் காணுதன் மைவிழி
கொங்கை போன்றொளி ராவங் கொடுமரந்
துங்க நாந்தகந் தோற்பரந் தாங்கின
ரங்கண் வெங்க ணமர ரணவினர். (சுஎ)

இன்ன நால்வகை வாகினி யீண்டுறப்
பொன்ன கர்க்கிறை போர்க்குவெண் டுங்கன்மீ
மன்னு சீத மதிக்குடை நீழற்கீழ்த்
துன்னி யேற்றனன் றுன்னலர் சேனையை. (சுஅ)

தான வப்படை வீரருஞ் சார்ந்தெதிர்
வான வப்படை மன்னர்த மேற்றெறக்
கூனு வில்லிடைக் கோத்துக் கொடுங்கொலை
யீன மில்படை யெண்ணில வெய்தனர். (சுகூ)

விட்ட வப்படை வீழுற மாறுநஞ்
சிட்டர் வாளிக ளேவி யிறுத்தவர்க்
கிட்டி விண்ணவர் கேழ்கிளர் பூணின்றோள்
கொட்டி யார்த்துக் கொடுங்கணை கொட்டினர். (எ0)

அன்ன வண்டுகள் வண்டுக ளாகவே
பன்னெ டும்படை பற்றலர் தூர்த்தனர்
முன்னெ திர்ந்து முனிந்திமை யோரும்வெங்
கொன்ன வின்ற கொடுஞ்சரம் வீசினர். (எக)

தாளுங் கையுஞ் சரிந்தனர் விண்ணக
ராளும் வேந்த னனிகத் தவர்சிலர்
தோளு மொய்ம்புந் துணிந்தனர் தானவக்
கோளின் வீரர் குழுங்களிற் பற்பலர். (எஉ)

வைய மோடெதிர் வையங்கண் மோதின
மையன் மாவொடு மாவின முட்டின
செய்ய வாழி சிகரமொ சிந்தன
வெய்ய மத்தகம் வெண்கோ டுடைந்தன. (எங)

வேறு.

தானவர் தலைவ னின்ன சமரினை நோக்கி மிக்க
மானம துக்கக் கோப மண்டிக்கட் டையு குத்துக்
கூனல்வன் சிலைநா ணேற்றிக் குணத்தொனி படுத்தெ திர்த்து
மேனிலத் தலைவன் மேனி வெதுப்புறத் தீக்கோ றெட்டான். ()

புரந்தரன் சாபம் பூட்டிப் புனற்படை விடுத்த வித்தா
னரந்தைகொ டையோன் றானு மப்படை தொடுத்தான் போகி
யுரந்தரு கந்த வாக னுறுபடை துரந்தொ ழித்தான்
கரந்திடு வஞ்ச னந்தக் கணையினை மீட்டுத் தொட்டான். (எரு)

கரியவ னஞ்சு பில்குங் கட்செவிப் பகழி யுய்த்தா
னரியெனத் தகுவன் காரு டாத்திரந் தொடுத்து மாய்த்தான்
தெரிமதுக் கற்ப நாடன் சிங்கக்கோ றெட்டான் றீயோர்
பெரியவன் சிம்புள் வாளி பெய்தனன் றுணித்து நின்றான். (எசு)

வானவர் கோமான் மோக வாளியை விடுத்தா னந்தத்
தானவர் கோமான் ஞான சரத்தினுல் வீட்டி நின்றான்
மானமீப் பொருது போகி வச்சிரந் திரித்துத் தாக்க
வீனமுற் றவனோர் சூல மெடுத்தெறிந் தனன வன்மேல். (எஎ)

அன்னது வரானை கண்ட வாயிரங் கண்ண னஞ்சா
வெந்நிடு கிட்டுப் பொன்னன் விரைமல ரடியிற் றாழ்ந்து
தன்னது தோல்வி சாற்றித் தமரொடு மேங்கி நின்றான்
றன்னிகர் தகுவர் வேந்தன் சயமுர சறைந்து மீண்டான். (எஅ)

ஏக்கமிக் குற்று நின்ற விமையவர் முகங்க ணோக்கி
வீக்குதா னவரை நீவிர் வேறன்மிக் கரிதோர் சூழ்ச்சி
நோக்கின னதுபா லாழி நோன்மையி லசுர ரோடு
மேக்குறக் கடைமி னுண்டாம் வெள்ளிய வமுது மாதோ. (எகூ)

அன்னதை யவுணர் துய்க்கா தரியினுல் வஞ்சித் துண்ணி
னென்னலர் படையா னீவி ருருவிளி யாது வாழ்வீ
ரென்னனுஞ் சுனுசி ரன்று னெண்ணலர்ப் புகழ்ந்து பொய்த்து
நன்னய முரைத்து நட்டன் னுரொடு நரலை புக்கான். (அo)

மந்தர மலைமத் தூன்றி வாசுகித் தாம்பி யாப்பிட்
டிந்திர னிமையோ ரோர்பா லெறுழ்வலி யவுண ரோர்பாற்
பந்தியி னுநீஇக்க டைந்தார் பயோததி நாப்ப ணில்லா
முந்தராப் பொருது நஞ்சை முனிவின்வாய்க் கக்கிற் றம்மா. (அக)

எழுந்தவா லாலங் கண்டோ ரியாவரு மச்சுற் றாழி
யெழுந்தகாற் படுபூ ளைப்பூ வெனவிரைஇப் பறந்துபோய்ப்பெண்
ணெழுந்தவோர் கூற்றி ஞனை யிணைச்சரண் சரணென் ஞநா
வெழுந்தபே ரோதை யோடு மெய்தின ரோல மென்றூர். (அஉ)

அக்கடு கடுகக் கையா லள்ளினன் கண்ட மட்டாப்
புக்குறப் பெய்து வாயிற் பொறிகலே மகண்முன் ஞனர்
தொக்கபஃ றுலி காத்தான் றாயமா தேவன் யார்க்கு
நக்கனே யுயர்ந்தோ னென்ன ஞமமே காட்டு மன்னோ. (அந)

பின்னரன் னவர்தா மீட்டும் பெட்டுமத் தித்தா ராகப்
பொன்னவிர் மணியா வைந்து பொற்றரு வெண்மா வாதி
மன்னிய பொருள்க டோன்ற மான்முதற் றேவர் கொண்டா
ரின்னமு தெழுந்த தப்போ திமையவர் வலத்தொ டுள்ள. (அச)

மாதவ னுலக மெல்லா மயக்குமோ கினியாய்ப் போந்தப்
போதமு தெம்ம தெம்ம தென்றுசொற் போர்பு ரிந்த
தீதிலா வதிதி மைந்தர் திதிமைந்தர்ப் பந்தித் தேமுன்
போதிய முன்னோர்க் கேயீந் தொழித்தனன் பின்னோ ரேங்க. ()

ஆசிலா வமுதுண் டேவ ரமரராய் வாழ்ந்தா ராக
வீசுவா னெளியா நீண்டு வியன்றுணைக் கருவி யாய
வாசுகி யுமிழ்ந்த நஞ்ச மாதேவற் கூணு யுற்ற
மாசுதா னுயிற் றந்தோ மாசிவத் துரோக மென்ன. (அசூ)

அச்சிவத் துரோகத் தானே யன்றுதொட் டங்க முற்றும்
பச்சிரத் தஞ்சிழ் நாற்றம் படிந்திழி விரண முற்று
மெய்ச்சுமை பொறுஞ யீசன் விரைமலர்த் தாள்வீழ்ந் தைய
துச்சனே னறியா தாற்றுந் துரோகநீத் தருள்க வென்ன. (அஎ)

இரந்தனன் வேண்ட நீண்ட விமயமீ னிமையோர் பாகன்
சுரந்தநல் லருளி னுல்வா சுகிமுக னேக்கிச் சொல்வா
னுரந்தரு கழுவா யீசற் குஞற்றிய துரோகந் தன்னை
வரந்தரு மவனே யன்றி மாற்றுந ரேவ ருள்ளார். (அஅ)

பாரினிற் பல்கு பொம்மற் பாண்டிமா நாட்டுட் கானப்
பேரெனுந் தலக்கு ணக்கிற் பெரும்புக ழாடா னைக்குப்
பூருவ தக்கி ணத்திற் புனவாய்க்கு நிருதி திக்கிற்
சாருவாஞ் சயபு ரிப்பேர்ச் சைவமா தலமொன் றுண்டால். (அகூ)

ஆங்குறீஇச் சிவதீர்த் தத்தி லாடிவன் மீக நாதன்
பூங்கழ லருச்சி செய்மெய்ப் புண்ணோயும் பவநோ யும்போ
மேங்குற லென்னப் பெம்மா னின்னரு ளாற்ப ணிந்தா
னீங்குவா சுகிமென் மெல்ல நெளிந்தூர்ந்து வழிக்கொண் டானால்.

பாதல நீத்துப் பூவிற் பாண்டிநா டுற்றுப் பெம்மா
னோதிய குறிப்பி னாடி யொளிர்திரு வெற்றி யூரைத்
தீதற வண்மி யீசன் றிருமுனர்த் தீர்த்த மூழ்கி
வேதகத் தயமா சென்ன மெய்ப்புண்டீர்ந் திடக்கி ளர்ந்தான். ()

அன்னவா சுகிவி யப்புற் றச்சிவத் துரோகத் தால்யா
னின்னநாள் வரைகொணோய்த்துன் பிழப்புற்றேன் பழம்புற்றீசன்
றன்னருள் வலத்தா லென்னாத் தன்சிரக் குவிகை யானாய்ச்
சன்னிதி யடைந்து முக்காற் றலைநிலந் தோயத் தாழ்ந்தான். ()

பான்முத லமுத மைந்தும் பஞ்சகவ் வியந ரூவுங்
கான்மிகு பனிநீர் சாந்தங் கனிந்தமுப் பழமுங் கொண்டு
மான்முத லானோர்க் கெட்டா வன்மீகக் குறியை யாட்டித்
தேன்மலி கொன்றை வில்லைத் தெரியல்சந் தாடை வேய்ந்து. ()

நறுவிரைத் தூபந் தீபஞ் சுழற்றிநே யத்த ளாவு
மறுசுவைப் போன கங்க ளன்பொடு நிவேதித் துப்பின்
மறுவிலா வில்லத் தானு மருவுசெம் மணியி னானு
முறுபெயர் நூற்றுப் பத்து முரைத்தருச் சனைபு ரிந்தான். (௬௪)

ஆடினா னாநந் தக்கண் ணருவிநீ ராடி னானுண்
ணீடினா னுவகை பொங்கி நீளிரு குவிகை சென்னி
சூடினா னுடல முற்றுந் துன்னிய புளகப் போர்வை
மூடினான் வலஞ்செய் துற்று முன்னின்று பழிச்ச லுற்றான். (௬௫)

முன்னமோர் மாத லத்தின் மும்மதக் களிறொன் றோடேற்
றென்னினத் தொன்று பூசை யியற்றவுட் கொண்டாய் போற்றி
பொன்னிலத் தவர்க ளென்றும் புக்குறை வெற்றி யூரிற்
பன்னக குலங்க ளிப்பப் பழம்புற்றில் வாழ்வோய் போற்றி. (௬௬)

என்குலத் தொருவற் கீச னென்றோர்தேத் திருந்தாய் போற்றி
யென்குலத் தவரைப் பூணா வெடுத்தணிந் திட்டாய் போற்றி
யென்குலத் தென்னை நாணா விசைத்திகல் கடந்தாய் போற்றி
யென்குலம் போற்ப ழம்புற் றிருந்தருள் சோதி போற்றி. (௬௭)

பணியின்கா தணியாய் போற்றி பணியினு ழியினய் போற்றி
பணியின்முந் நூலாய் போற்றி பணியரை ஞாணுய் போற்றி
பணியின்கங் கணத்தாய் போற்றி பணியினங் கதத்தாய் போற்றி
பணியினேன் பணிகொண் டாண்ட பழம்புற்று நாதா போற்றி.()

என்னநின் றேத்தி னனை யெம்பிரான் பழம்புற் றீச
னின்னது பூசை யேன்றே நிற்குவேண் டிவேவேண் டென்னப்
பன்னக வேந்தென் புண்ணுய் பாற்றுமிப் புனித தீர்த்த
மென்னபி தானத் தா லு மிலங்கவேண் டும்மி தான்று. (௬௬)

எச்சிவ துரோகத் தானு மெய்துதீ வினைக ளெல்லா
மிச்சிவ தீர்த்தந் தோய்கா லெதிர்ப்பினு மோவல் வேண்டுஞ்
சச்சிதா நந்த வீடுஞ் சார்தரல் வேண்டு மென்று
னச்சிய வாறு கென்னு நம்பிரா னருளிச் செய்தான். (௧00)

கேட்டவாக் கினைம கிழ்ந்து கிளரொளி மேனி வாய்ந்து
தாட்டுணை பணீஇயெ ழுந்து சயபுரி யீசன் றன்பான்
மீட்டிடா வன்பி னேடும் விடைபெறீஇப் படர்வுற் றுத்தன்
னட்டினை யடைந்து வாழ்ந்தா னலத்தவா சுகிதா னன்றே. (௧0௧)

ஆகத்திருவிருத்தம். அ௬௫.

வாசுகி சிவத்துரோக நீக்கப்படலம் முற்றிற்று.

---

# முனிவர் பூசவணப் படலம்.

ஐம்புல னெருக்கிக் கரணநான் கடக்கி
யஞர்தரு குற்றமூன் றகற்றி
வம்புறு மிருமை யொருவியோர் பொருளை
மாலறக் கண்டமா தவத்தோர்க்
கம்புவி போற்றுஞ் சூதமா முனிவ
னருளினல் வெற்றியூர்க் காதை
யும்பர்த மமுதை வென்றுவிண் புகுத்த
வுயர்நிலை யமுதினுள் ளூறுத்தான். (௧)

என்றுமோ ரியல்பி னின்றுசீர் படைத்த
வியற்றிரு வெற்றியூர் மேன்மை
சென்றுசென் றுயக் கடலினு மாழ்ந்து
சிந்தையிற் றெளிதர மலையின்
மன்றமற் றோங்கி மதியிற்சீர் தூக்க
மகிதலத் தூங்குமன் கனத்துத்
தன்றனி யறிவை யாழ்த்துயர்த் திருத்தச்
சற்றுநின் றுற்றினுஞ் சாற்றும். (உ)

கடவுளர் தம்முட் கண்ணுதல் போல
நதிகளுட் சிறந்தகங் கையைப்பொற்
படர்புகழக் குருவுட் காழிவள் ளலைப்போற்
பவமருந் தவற்றுணீ றதுபோற்
புடவிமங் கையரு ளரசியே போலப்
புருடருட் குலச்சிறை போல
வடைவுறு தலத்துட் சயபுர மென்று
மதிகமென் றையமின் றறிதிர். (௩)

பதிபிற வெல்லா மொன்றிருந் துழிமற்
றொன்றிரா பயமனி படைத்துக்
கதிநிலை மாறி விதிக்குத்திக் கெங்குங்
கலைந்திட வவ்வெரிக் கண்டு
விதியினல் வெற்றிக் கொடிதுவண் டாட
வீரபே ரிகைநனி முழக்கித்
துதிபெறத் தனிப்பே ரரசுவீற் றிருக்குந்
தொல்பதி சயபுரந் துணிதிர். (ச)

கற்பினிற் சிறந்தாள் கனிட்டையென் றுற்பின்
சேட்டையென் கடவளென் றிறுக்க
கிற்பதும் வேண்டுங் கொல்லிரே மூலகுங்
கிளத்துசீர் நிம்பமா வனத்தை
விற்பனப் புலவர் குழுவெலாம் வெற்றி
யூர்க்குறி யான்விதந் துரைத்தார்
சிற்பமா ரிதனின் வைத்தொழிக் தவற்றை
யுய்த்துணர் வாற்றெளி கென்றே. (ரு)

பொருளெலாஞ் சமட்டி வியட்டியாம் வெற்றிப்
 பொருளுமவ் வியற்றன்றே புவியின்
மருளறு தருக்க நூன்முடி பிதுவே
 மாசில்சீர் நிம்பமா வனத்தைத்
தெருளினர் சமட்டி வெற்றிமா நகராத்
 தேர்ந்துசித் தாந்தஞ்செய் ததனைக்
கருளிரீஇ நிருப பதக்குறி யீட்டாற்
 கண்கூடு காட்டின ரன்றே. (௬)

காமனே பெரிதோற் காமனு மாவி
 காலனைக் காற்றுகா லனுமென்
பூமனைச் சிரங்கொய் பூமனுங் கயன்றேல்
 போக்கியோர் புரிந்தபங் கயனும்
மாமனைத் தடிந்த மாமனும் புரரை
 வாட்டிய வனிதைவாழ் புரனு
சாமனந் தகற்கொல் சாமனந் தகனுஞ்
 சலந்தரற் றடிசலந் தரனும். (௭)

என்றிவ ரெண்மர் சேவகம் வியட்டி
 யாகமற் றிவையொருங் கேய்ந்த
துன்றிய சமட்டி வியாபக சயந்தன்
 சொம்மெனக் கொண்டசே வகனார்
வன்றிறற் பழைய புற்றிடத் தாரென்
 பதுநிரு விவாதமென் வழக்கே
யன்றடை மொழியாஞ் சமட்டிகா மத்தா
 லாய்த்தெனி லன்றல்யாண் டையதே. (௮)

வீரட்ட மட்ட மென்றவைக் கேயிவ்
 விதிதலைப் படுமெனி னினியென்
போரட்ட மென்றே துணிந்தொதுங் குதுமேற்
 புரிவதில் வேறெனப் பொருவில்
காரட்ட கண்டர் பதிபிற வெல்லாங்
 கைமுதி கங்கடைப் பிடித்தே
பாரட்ட திக்கும் பரந்தன வென்றார்
 பழுதில்சொற் பாவல ரன்றே. (௯)

தீத்தொழி லசுரர் குழுவினை யொருகாற்
சிவனருள் வலிகொடு தேவர்
தேய்த்துறு களிப்பா லமரர்கோன் சுதன்மை
சேர்ந்துமா சபைதிரண் டுறுங்காற்
சோத்தமெம் பிராற்குப் புரிந்திலர் தாமே
சுவசத்தி கொடுசெயித் தனரென்
ருத்தனை மறந்து தருக்கினு ரைய
னதுதுடைப் பானுளங் கொண்டு. (கo)

இயக்கநல் லுருக்கொண் டச்சபை முகப்பி
லேதிலர் போலமற் றெவரும்
வியக்கவாண் டிறுமாந் திருந்திட விண்ணோர்
வித்தக னுளக்கிடை விளங்கா
ருயக்கதி காட்டு மொருவனென் றோரார்
யார்கொலோ வுவனென வுசாவி
மயக்கம தறிவு பறிமுதல் செய்ய
வொருவர்மற் றொருவராய் வந்து. (கக)

யார்கொனீ யென்ன வெமைவின வுதற்கீண்
டியார்கொனீ யெனத்திரற் கரித்தாங்
கோர்சிறு துரும்பை நிறீஇயசைக் கெனலு
முறுவலிப் பவனன்மற் றதனை
யார்வலி கூட்டி முயன்றுமெய் வேர்த்தாங்
கயர்த்தன னவிக்கென வங்கி
நீர்கொளுள் வடவை யுருக்கொளீஇ யடுத்தான்
றகித்ததங் கவனையங் நிலையே. (கஉ)

மகபதி செலுத்தி வச்சிர மொடிந்து
மயங்கினன் மற்றுமற் றுயர்ந்த
சகபதி களுந்தம் வலிகுலைந் தச்ச
மதிசயஞ் சார்ந்துளந் திகைத்தா
ரகவயின் மானத் தசாவினர் நிற்ப
வருளுருக் கரந்தன னுங்காங்
ககமம வென்றுங் கவரவர் தம்மை
யாட்டுவ னுகிய வண்ணல். (கங)

மலைமலை யாய வானவர் தலைவர்
வான்றிசை காவலர் வாரி
யலைகடல் வாய்ப்பெய் துலகினை விழுங்கு
மத்தகு தகுவரை யலைத்து
வலையிடை மாச்செய் வலியினர் சிறிதோர்
துரும்புக்கு வாளமர்ப் பயிக்கங்
கலைவொரீஇ யளிக்குங் கைத்தில ரானுர்
கைத்தியாண் டுடையவன் கவர்ந்தால். (கச)

காட்டுவான் ருனே காட்சிதந் தமர்ந்துங்
காண்பவர் கண்டிலர் கழறிற்
காட்டுவா னென்னுங் காட்டிடுங் கருணை
கலந்திடா விடிலிது கருத்தாற்
காட்டுவா னுய தானுந் தன்றைய
னும்மெனுஞ் சுருதிகண் டனமாற்
காட்டுவாற் காட்டு விப்பவள் காண்பாற்
காண்பிப்பாள் கருணையங் கனையே. (கரு)

அருமந்த தேவ ரருமறை தமக்கு
மருமறை வெள்ளிடை யமர்ந்துந்
தெருமந்த வதற்குக் கருணையங் கனைமா
தேவிதான் றிருவுள மிரங்கி
வருமந்தக் காட்சி தந்துமக் காணீர்
மயங்கினீர் வலியர்க்கும் வலியாய்ப்
பொருமந்த மதுகை சிவமன்றோ வென்ற
பொருளுமச் சிவமன்றோ புலவீர். (கசு)

உருத்திர நின்னின் வலியனில் லென்று
முரைத்திடு வல்லிலோ னென்று
மருத்தியா னமவுக் கிராயச பீமா
யவ்வென்று மகிலபூ தங்க
டரித்துறு மீசு வரன்சர்வை சுவர்ய
சம்பந்நன் சர்வேசு வரனென்
றுரைத்தெழு சுருதி கற்றவு மறந்தீர்
சமயத்திற் குதவில வாக. (கஎ)

சிவமன்றி யெதுதான் செயலுறும் வெற்றி
சிவமன்றி யெப்பொருட் சேருஞ்
சிவசொமற் றதுவென் சமர்ப்பண மறிவாற்
செய்திலிர் தெருமந்தி ரினிநீர்
சிவமரு வன்பாற் சரண்புகுந் துய்தி
சேர்குதி ரெனவவர் தெருண்டு
சிவமலி வைப்பாய் வெற்றிசேர்ப் பிடமாய்க்
காட்சிமிக் கெளியதே மெதுகொல். (கஅ)

அன்னையிங் குணர்த்து கென்னலு மையை
யமரர்கா ளவனியிற் றமிழ்த்தேந்
தென்னுறு திசைய தங்கதிற் பாண்டி
நாட்டினிற் பொருநைதீ ரத்தின்
மன்னுசீர்த் தேவி சாலமா நகரத்
தணியது நிம்பமா வனமற்
றன்னதிற் புகுந்து சயசய சயவென்
றலைகடன் முழக்கென வார்த்து. (ககூ)

வணங்குதி ரென்றுய் மறைதலும் விண்ணோர்
வகுத்தவா நிம்பமா வனத்தை
யணங்கொரீஇ யணைந்து சயசய சயவென்
றம்பர மழுங்குற வார்த்துப்
பணங்கொள்பாப் பணியார் பழையபுற் றிடத்தார்
பாகமா தேவியார் பதும
மணங்கொடா டலையிற் பொருந்தமுன் வீழ்ந்து
வணங்கினர் மற்றெழா ராக. (உ0)

பாகமன் பிரியா நாயகி யுடனே
பழம்புற்று நாயகர் விடைமேற்
பாகம னுகித் தமதருட் காட்சி
பாவித்துப் பண்ணவீ ரினிச்சற்
பாகம னுறுக வெற்றியும் வலியும்
படைக்கமற் றெழுகவீண் மெக்குப்
பாகம னுய வரமுரைக் கெனலு
மெழுந்தவர் பகர்குந ரானர். (உக)

கடு

வெற்றியும் வலியு நினதுடை மைகளா
வெமதென்ற பாபம்விண் டிடவும்
வெற்றியும் வலியு நின்னவென் விமலே
விதியினுல் வெற்றடி யேம்யாம்
வெற்றிநின் பாற்சேர்த் தமையினு னின்பால்
வெற்றிசேர்ந் தமையினு லிவ்வூர்
வெற்றியூ ரெனும்பேர் மூவுல கிடத்தும்
விளங்கவு மருள்குதி விமலா. (உஉ)

நின்றனை வெளியே கண்டுமோ கத்தா
னின்னியன் மறந்தன நிமலா
தொன்றுறு சுருதி சதங்கள்கூ றியவவ்
வலியெலா மொருசிறு துரும்பிற்
கின்றமைத் தின்ற னருளது துரும்பே
லருளிலா மலையதற் கெளிய
தென்றதுங் காட்டி மறைந்தனை யெம்மோ
யெளிவந்தங் குணர்த்திட வுணர்ந்தேம். (உங)

துரும்புக்கும் பற்று நாயின மென்று
தொல்லையோர் துதித்தசொன் மாலைக்
கரும்பினு மினிய மொழியுப சாரங்
கயமையே மிடத்தறு பவமா
விரும்பினும் வலிய மனத்தினேங் கடைப்பட்
டிழிந்தன மெமக்கரு ளிறைவி
சுரும்பிசை பாடு ஞானப்பூங் கோதை
சொற்றிட வுளவெலாந் துணிந்தே. (உச)

அம்மையா லப்பா நினைச்சரண் புகுந்தே
மடியமற் றின்னினி நினது
மெய்ம்மைசே ரருளே லீலையா லேனு
மறக்கிலா விபவநன் குறவு
மெம்மையீண் டளித்தாட் கொள்கவென் றிறைஞ்ச
வெம்பிரா னியைந்தியற் கையினு
லெம்மையு மீது வெற்றியூர் நம்மாற்
செயற்கையாஞ் சிறப்புமெய் தியதால். (உரு)

சயசய வென்று நமையடுத் திட்டீர்
    சார்வரம் வேண்டினீ ரதனாற்
சயபுர நாமம் பதிக்கரு ளுமக்குச்
    சார்கெனச் சங்கரன் மறைந்தான்
சயசய கூறி யருளினு லமரர்
    தம்பதி புகுந்துவாழ்ந் தனராற்
சயபுர மேன்மை யொன்றுகொன் முனிவீர்
    சத்துவ குணத்தினிற் சான்றோன். (உசு)

ராமசந் திரன்முன் னரக்கனை வீட்டி
    ரமையைமீட் டிடும்வெற்றி தனக்காங்
காமதோ வென்று சலித்திட வெற்றி
    யாமென வருட்சய புரியார்
காமுகற் றடிந்து மனையொடு மீண்ட
    காலையிற் கருணையால் வெற்றி
யாமென வளித்த சயபுர மிதுகா
    ணன்னமே யெனவறி வுறுத்தான். (உஎ)

அன்னமென் னடையாண் மின்னினுண் ணிடையாள்
    சாநகி சயசய வன்பாற்
பன்னினள் கொழுந ளுடபெணிந் தனளாற்
    பரவுசீர்ச் சயபுர நாம
முன்னிபம் பலவான் முனிவிர்கா ளின்னு
    மொழிந்திடின் விரியுமற் றதன்சீர்
சொன்னதைப் பின்னும் விருப்பினு லுமையாள்
    கேட்டிட விறைவர்சொல் குவரால். (உஅ)

இரவுநண் பகலுஞ் சயபுர மேன்மை
    யாயிரத் திருகவர் நாவாற்
பரவுவா னகிப னயன்பரம் பரிக்கப்
    பற்பல வூழியாப் பகர்ந்தும்
விரவிலன் முடிபை யயன்பல்கால் வந்து
    முடிந்ததோ வெனவினுஞ் சேட
மருவிய தென்றுன் சேடனு கெனப்பேர்
    வழங்கிற்றவ் வணமென்பர் வல்லோர். (உகூ)

வேறு.

என்று சூத னியம்பிடத்
துன்று நற்றவர் தோத்திர
மன்ற பன்னி வழுத்தியே
பின்று மொன்றது பேசுவார். (ரு0)

வேறு.

நூலெலா மையந் திரிபற வுணர்ந்த
நோன்மைசான் மாதவக் குரவ
ஞாலமன் னுயிர்க்குப் பவப்பகை கடத்து
நயத்தகு வெற்றியின் வைப்பாய்ப்
போனுமென் னுருபைப் பின்னிடா நகரின்
பொற்பெலாம் புலங்கொளப் புகன்றாய்
பாலர்கட் கூட்டு மன்னையே போலப்
பண்டுநாம் பயின்றபாக் கியத்தால். (ருக)

கங்கையிற் கொண்டார் கங்கையிற் கொண்டார்
காதலால் வழிபடு மவர்க்குச்
சங்கையி லாதே சங்கையி லளிப்பார்
சாதலும் பிறத்தலு மாகி
மங்கைகூ றத்தர் மங்கைகூ றத்தர்
மன்னுசீர்ச் சயபுர மன்னர்
பங்கச மிரிக்கும் பங்கசத் தாட்ச
பரியைசெய் திடவுளம் பரித்தேம். (ருஉ)

சிவனருட் பூசை சயபுர மதனிற்
செய்வது மதியெமக் கடிகாள்
பவமற வருள்க வதன்விதி பகரும்
பரமவாக் கியமெது பகர்க
தவமுனி நாத வென்றடி தாழ்ந்து
வேண்டிடச் சத்துவ குணத்தீ
ரவமிலீர் சத்தி நிபாதத்துத் தமர்நீ
ராகலி னறைகுதுங் கேண்மின். (ருரு)

வேறு.

சச்சிதா நந்தசிவ மொன்றேமற் றதற்குச்
சத்திதா னக்கினிக்குட் டணம்போலச் சாரு
மெச்சுசிவ ஞானமாங் கிரியைசத்தி யாகும்
விளம்பிவற்றின் சமநிலைதான் மேவுசதா சிவமாம்
பொச்சமின்மெய்ச் சதாசிவத்திற் பிரமமைந்து முகமாம்
புகலுமீ சானந்தற் புருடமகோ ரஞ்சீர்
வைச்சவா மஞ்சத்தி யோசாத மூர்த்தம்
வரைகிழ்தென் வடக்குமேற் கிவைவழங்கு திசையே. (௩௪)

ஐந்துசத்தி வடிவாகி யைந்தொழிற்கு முதலா
யைவர்க்கும் பிறப்பிடமா யைந்துபா சமுங்கு
மைந்துறச்செய் கலையைந்தாய் மாபூத மைந்தாய்
வருமுகமுஞ் சடங்கமுமாய் மன்னுமரு வுருவாய்ச்
சந்தமுறு பீடலிங்கா காரமாய் நடுவாய்த்
தனியொளியாஞ் சதாசிவமே சதுர யோகிகட்கும்
பந்தமகல் யதிகளுக்குந் தீக்கிதயோக் கியர்க்கும்
பத்தர்க்கு முபாசியமாப் பகருமரு ளூலே. (௩௫)

இத்தகைய சதாசிவத்திற் பத்திதலை நின்றே
யியற்றுவர்மெய்ப் பூசையகம் புறமெனமற் றிரண்டாஞ்
சுத்தமிச்சிர கேவலமா மூன்றுருகு மிவற்றின்
றொகைவகைவி ரித்திறத்தாற் சொற்றவிதிப் பரப்புஞ்
சத்தியதி காரிகளு மந்திரமுங் கிரியா
சாதனமும் பாவகமும் பலமுமுப கரண
வத்துவுங்கா லமுந்தலமு மரபுமிவை யெல்லாம்
வகுப்பதுமெய்ச்சிவாகமமென் றுரைப்பர்வழக்குணர்ந்தோர்.

மறைநான்கு மாகமங்க ளெழுநான்கு மிவையே
யான்பிரம மாஞ்சிவத்தின் வந்தமுத னூல்கண்
மறைநான்குந் தற்புருட முதனன்கு முகத்தின்
வந்தனவா மாகமங்க ளெழுநான்கு மற்றைத்
துறைநான்கு ளூர்த்தவீ சாநத்தி லுதித்தூர்த்
துவசுரோ தோற்பவங்க ளெனுந்தலைமை தோய்ந்து
மறைநான்கி னுட்பொருளைப் பூர்வபக்கம் போக்கி
வகுத்துரைத்துச் சித்தாந்த வான்பெயரும் பெறுமே. (௩௭)

மறைநான்கும் பல்லோர்க்கும் பலபொருளு மீந்து
மதகோடி கட்கிடனுய் வைதிகத்தாற் பொதுவாந்
துறைநான்கா மாகமங்கள் சத்தினிபா தர்க்கே
தொல்சிவமாம் பொருளீந்து சைவத்தாற் சிறப்பா
மறைநான்கும் பூர்வபக்க மலிந்துயர்சித் தாந்த
மறைந்துபொதுச் சுருதியென வழங்குமதை மாற்றித்
துறைநான்கா மாகமங்கள் சித்தாந்த மலிந்து
சொல்பூர்வ மறைசிறப்புச் சுருதியென லாமால். (ஙஅ)

மறைநான்குங் கருமமென ஞானமென விரண்டாம்
வருகரும மெச்சாதி பலஞ்சுவர்க்க மாதி
மறைநான்கின் ஞானமத்தி யான்மகமாம் பலமும்
வருமான்ம லாபமென வகுப்பர்கண்மெய் யுணர்ந்தோர்
துறைநான்கா மாகமங்கள் கருமஞா னத்தாற்
சொல்லிரண்டாஞ் சரியைகிரி யாயோக ஞானத்
துறைநான்கின் முன்மூன்றுங் கருமமற்று ஞானந்
தொல்சிவமே மெய்ப்பொருளாத் துணிந்தவழி யிவையே.()

சரியைகிரி யாயோகத் தருநெறியின் பலந்தான்
சாலோக்கிய சாமீப்பிய சாரூப்பிய மென்ப
வுரியசிவ ஞானத்தின் பலஞ்சாயுச் சியமா
முயர்ஞான மதுபரமற் றபரமென விரண்டா
வருதுறைக ளுன்கினிரண் டாவதெனுங் கிரியை
வரதனுர் பூசையென வழங்குவமற் றதனே
விரிதரமெய்ச் சிவாகமம்போ லெந்நூலும் விளம்பா
வெள்ளிடையின் மலையென்ன வநுபவமற் றிதுவே. (சo)

ஆகமத்தின் முறையுணரி லரியசிவ தீக்கை
யடைந்தவராய்ப் பூர்வபக்கத் தயல்விரும்பா மதியாற்
பாகமொத்த கருத்தினர்க்கே யதிகாரம் பகர்ப
பண்டையநற் றவத்தார்க்கே பலிக்குமது வன்றிக்
காகமதாய்ப் பசுநூல்கள் கதறுபவர்க் கெங்ஙன்
கனவினிலுங் காணவற்றுந் தீக்கைபெற்றூர்க் கன்றி
யாகமத்தி னதிகார மிலததுவுங் குருவா
னன்றிவரா தவனுமருட் பருவம்பார்த் தளிப்பன். (சக)

கண்ணன்முன் யமுனைநதிக் கரையதனிற் பூசை
காதலினாற் செய்துமருட் சிவதீக்கை குருவா
னண்ணினு னிலன்பலமு நண்ணியதின் றெங்க
ளாதனார் புலியினகப் பாதனார் மகனார்
பண்ணினார் வெள்ளானைப் பவனியிற்செந் தமிழின்
பாவலரை நாவலரைப் பரஞ்சோதிப் பொருளைக்
கண்ணினாற் கண்டதவக் காட்சியார் தொண்டர்
கதையுரைத்தக் கரைகண்டா ரக்கரையின் வருவார். (சஉ)

பாற்கடலுண் சைசவத்தின் மாற்கருளும் வரத்தைப்
பரிந்துதிரு வுளந்தெரிந்தப் பதுமைகோன் பூசைப்
பாற்கழிநின் மாலியந்தன் னூற்கரையி னெதுங்கப்
பற்றியத னாற்பூசை முற்றியருட் சைவ
நூற்கதியே தீக்கைபெறு நீற்குரிசில் பூசை
நுவன்றசிவ பூசையன்மை நவின்றருட்சோ கத்தாற்
காற்பதும மவன்றலையின் பாற்பதித்துச் சைவா
கமமொழியு மைந்தெழுத்தைத் தமமொழியக் கரைந்து. ()

உரைத்தசமற் காரங்க ளொழிந்தனவும் புரிந்தே
யுடையவரைத் தந்துசிவா கமத்தினுரைப் படியே
தரைத்தலத்திற் பூசைசெயு மகப்பெறுக வென்று
தண்ணளிசெய் தேகினனெம் மண்ணுப மகிய
னிரைத்தகூர் மத்தும்பா ரதத்தாநு சாச
நிகத்துமற்றைத் தலத்துமிது நேர்ந்தபொழு தெல்லாந்
தரைத்தலத்தி னயனனையீ ருரைத்தனமன் றேமன்
றக்கபிரா சங்கிகத்தாற் சாற்றிலமற் றீண்டும். (சச)

உமையாணங் கணபதிசெவ் வேளயன்மால் போகி
யும்பர்முனி யிருடிகண முரகர்நரர் விலங்கு
கமையாள்புள் ளூர்வனநீர் வாழ்வனதா வரமாக்
கதித்திடுயோ னியிற்பிறந்து கன்மவிசே டத்தா
லெமையாளு மிறைபூசை புரிந்தவர்க ளெல்லா
மியைந்தவதைக் கிரமவழி யியற்றியதெல் லாநந்
தமையாளுஞ் சித்தாந்த விதிவழியா லன்றிச்
சாத்திரமற் றெதனாலோ சாற்றுகசத் தியரே. (சரு)

ஓதுமிஃ துணரார்விப் பிரர்பல்லோ ரும்மை
யுறுவலியி னசுரராக் கதராகி யுழன்றோர்
கோதுமலி கலியதனிற் பிரமயோனியிற்பு
குந்துபிறப் பாரென்ற கொள்கையினாற் பிறந்தோர்
வேதநெறி யுளவுணரார் மிருதிபுரா ணத்தின்
விதியுணரார் வெறிபிடித்த வெறும்பேய்க ளாகி
யாதிசைவ நூற்கிலா கவமுரைத்தாங் கெரிவா
யருநரகிற் கிரையாகி யலேகுநரா யினரே. (சசு)

அவர்கதையென் பயனமைக தவமுனிவீ ரென்று
மரன்விரும்பு முதனூல்சை வாகமமென் றறிதிர்
தவமுறுநீஇப் பூசைபகர் பரமவாக் கியமங்
கதுவென்க சயபுரத்திற் சார்ந்துமெய்யா தரவாற்
சிவனருட்பூ சனையுஞற்று கென்றருளக் குரவன்
சேவடியிற் றாழ்ந்துதுதி செப்பியற வோர்கள்
புவனிபுக ழருட்பாகம் பிரியாணு யகரைப்
போற்றிசய போற்றியெனப் போற்றிவழிக் கொண்டார். ()

வேறு.

பாவி ரித்துறை பாடிடு பாவலர்
நாவி ரித்துறை நன்மது வுண்டளி
பூவி ரித்துறை பூம்பொழில் சூழ்கொளுங்
காவி ரித்துறை நாடு கடந்தரோ. (சஅ)

ஆண்டி னுட்டுற வாரமு துண்டவ
ரீண்டி நாட்டுள ரென்னத் திரிதரூஉ
வேண்டி நாட்டுறு வேள்வியி னூண்கொளும்
பாண்டி நாட்டினைப் பண்ணவர் நண்ணினர். (சஅ)

எல்லை யாயவெள் ளாற்றி னிருங்கரை
யொல்லை யேறி யுரக நதியொடு
மல்லல் வாய்ந்த மதுநதி தாண்டிமுற்
சொல்லு மக்குறித் தேத்தினைச் சூழ்ந்தனர். (ரு0)

அலகி லாத வறவர்தாங் கண்டன
ரலகி லாத வறங்கண் மலிந்துசி
ரலகி லாதன வாம்பொரு ளீண்டியே
யலகி லாநல னுர்திரு வெற்றியூர். (ருக)

பண்ணி லாவும் பழம்புற்று நாதனு
ருண்ணி லாவு முவப்பொ டுறைந்தருள்
விண்ணி லாவு விமானநேர் காண்டலு
மெண்ணி லாமகி ழீண்டி யிறைஞ்சினர். (௫உ)

கிட்டி யாலயக் கீட்டிசைத் தாகிய
மட்டி லாத வரங்கொளும் வாசுகிப்
பட்ட தீரிற் படிந்துவெண் பூதிப்பூச்
சிட்டு மெய்யி லெழிற்கண்டி பூண்டனர். (௫௩)

கோயி லின்றிருக் கோபுர வாயிலுட்
போயு வந்து புகுந்து விடைக்கொடி
மீயு யர்ந்த வியன்றம்பக் கீழ்நிலந்
தோய வெட்டுறுப் பேய்த்துத் தொழுதனர். (௫௪)

சென்னி மேற்கரஞ் சேர்த்து வலம்புரிந்
தின்ன றீர்ந்த வெழிற்கரு வில்லினுண்
மன்னி வாழ்வுறு வன்மீக நாதனை
நன்னர்ப் பூசனை நாட்டுதென் மேயினர். (௫௫)

தவன கும்பஞ் சமக நமகங்க
ளவமி லாமல ரைந்துவைத் தாவினைந்
துவம னில்லமு தைந்தி னுடன்சாந்தம்
பவம கற்றும் பரன்முடிக் காட்டினர். (௫௬)

நொய்ய நுண்டுகி ணேனுதி ரம்புலர்த்
தைய சாந்த மணிந்துபீ தாம்பர
மெய்ய கண்டி விரிமலர்த் தார்புனை இக்
குய்ய தூபமுந் தீபமுங் கோட்டியே. (௫௭)

அறுசு வைத்தநெய் யன்னநி வேதித்துத்
தொறுவு கைத்த துழாய்விடை யண்ணற்கு
மறுவ லீரெட்டு மாணுப சாரமு
நிறுவி வில்லத்து நேர்ந்தா ரருச்சனை. (௫௮)

ஆயி ரம்பெய ராலு மருச்சித்து
நேய கற்புர நீரா சனம்வளைத்
தோயு மைம்புலத் தொண்டவர் தோத்திரம்
பாய வன்பினிற் பாடுதென் மேயினர். (௫௯)

சங்க ராசிவ சம்போ பணப்பணிக்
கங்க ணுபர காலகா லாவுமை
பங்கின் மேவப் பழம்புற் றமர்ந்தரு
ளெங்க ணுயக னேபோற்றி போற்றியே. (சூ0)

இந்தி ரன்முத லெண்ணி லிமையவர்
வெந்த வுள்ளத்த ராக வெதுப்புவான்
முந்தி ருந்தவர் முப்புரந் தீயெழ
நந்தெ யிற்றி னகையினே போற்றியே. (சூக)

நாக மன்ன நகிலத் துமையவள்
பாக நீங்காப் பரம்பொருள் போற்றியே
மேக மென்னுமெய் விண்டு வணங்கமெய்ப்
போகந் தந்த புராதன போற்றியே. (சூஉ)

இன்ன வாறு பழம்பதி யீசனை
நன்னர்ப் பூசனை யாற்றி நலம்பெறீஇ
யன்ன வாறுபா கம்பிரி யாளையு
மன்னி யர்ச்சித்து வாழ்த்தினர் மாதவர். (சூங)

பின்னர்ப் பாகம் பிரியாள் பழம்புற்று
மன்னு மீசன் வரங்க டரப்பெறீஇ
யன்னர் பால்விடை கொண்டுமீண் டண்ணினர்
நன்னர் மாதவ நைமிச வாணரே. (சூச)

## வாழ்த்து.

பூவுலகிற் றிருவெற்றி நகரம் வாழ்க
புங்கவனும் பழம்புற்று நாதன் வாழ்க
வாவலுறு மரன்பாகம் பிரியாள் வாழ்க
வவர்மதலை யாவாரும் வாழ்க வாழ்க
பாவுபுக ழத்தலத்தா லயத்துப் பூசை
பணிவிழாச் சிறப்பினியற் றிடுவோர் வாழ்க
மாவுறுமா கமம்வாழ்க மறையும் வாழ்க
மலிவினை தீர்ந் தின்பமுறீஇ யுயிர்கள் வாழ்க. (சூரு)

ஆகத்திருவிருத்தம் அகூஅ.

முனிவர் பூசனைப்படலம் முற்றிற்று.

---

திருவெற்றியூர்ப்புராணம் முற்றிற்று.

---

திருச்சிற்றம்பலம்.

